உ

ஸ்ரீ ராமஜெயம்



# கீதாசாரத் தாலாட்டு

## பதவுரை - கருத்துரைகளுடன்





சகல உபநிடதங்களும் பசுக்களாம். ஸ்ரீ கிருஷ்ண பகவானனவர் கறக்கிறவராம். அர்ச்சுனன் கன்றும். பிரம்ம சிஞ்ஞாஸையுள்ள புத்திமானே அனுபவிக்கிறவராம். பாலானது பெருமையுள்ள தேவாமிர்தத்திற் கொப்பாகிய கீதையாம்.

---

**87-ல் திருக்கடையூரில் ஸ்ரீ ராமநவமியன்று " மணிவிழா மலர் "**

**88-ல் JKK சம்பூரணி குருபூஜையில் " தசோபநிஷத் " (தமிழ்)**

**89-ல் குருபூஜையில் " ஆத்மசாதகன் ஆரம்ப விசாரணை "**

**90-ல் சங்கரர் ஜயந்தி விழாவில் " ஸ்ரீ ஆதிசங்கரர் வாழ்க்கை "**

**91-க்கு குரு பூஜையில் " கீதாசாரத் தாலாட்டு "**

உ

ஸ்ரீ பரப்பிரம்மனே நம:




# கீதாசாரத் தாலாட்டு

(மூலம், பத கருத்துரையுடன்)

## காப்பு

ஐவகைப் பொருளும் நான்கு
கரணமும் குணங்கள் மூன்றும்
செய்வினை இரண்டும் ஒன்றி
யாவரும் திகைப்ப நின்ற
பொய்யிருள் அகல ஞானப்
பொருட்கதிர் விரித்த புத்தேள்
கைவளர் ஆழிச் செங்கட்
கண்ணனைக் கருத்துள் வைப்பாம்.

(ஆக்குநூல் தடையின்றி நிறைவேற இறை அருள் வேண்டல்)

கருத்துரை: சூட்சுமதன் மாத்திரை, சத்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், சந்தம், ஸ்துல பூதங்கள், விசும்பு, காற்று, தீ, நீர், நிலம், வாயுக்கள், வியானன், பிராணன், அபானன், சமானன், உதானன், ஞானேந்திரியங்கள் சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை, கிராணம், சர்மேந்திரியங்கள், வாக்கு, பாணி, பாதம், பாயுறு, உபஸ்தம் இப்படி ஐவகைப் பொருளும். அந்தக்கரணம், அகரங்காரம், சித்தம், புத்தி, மனம் நான்கும் குணங்கள் சத்துவம், இராஜஸம், தாமஸம் ஆகிய மூன்றும், செய்வினை - புண்ணியம், பாவம், இன்பம், துன்பம், நல்வினை, தீவினை ஆகிய இரண்டும் இவையனைத்தும் பொருந்தி ஒன்றி ஒன்றேயாய் ஈஸ்வரனையும்

மெய் ஞானியையும் தவிர யாவரும் திகைத்து மயங்கும் படியாக ஆச்சரியப்பட்டு நிற்க, அவித்தை என்னும், அஞ்ஞான பொய்யிருள் அகல பிரம்ம வித்யாரூபமாகிய மெய்ஞானக் கதிர்ச்சுடர் ஜோதி விரிந்து, பஞ்சதன் மாத்திரையுடன் ஈஸ்வரன் வித்தை என்னும் எழு வகையும் மேலான உலகங்கள் ஏழும் கைச் சக்கரமாய் கொண்ட அஞ்ஞான துர்ஆத்மாக்களிடம் சினத்தால் சிவந்த கண்களை யுடைய ஞான சூரியனாகிய கண்ணனை அந்தக் கரணத்துள் உள் முகமாய் தியானச் சமாதியில் நிலை நிறுத்தி வணங்கு வோமாக.

1 ''சீராரும் பரமார்த்த தெரிசனத்தை
அருள்செய்யப்
பேராரும் தேசிகனாய்ப் பெருமானே
வந்தவரோ''

பதவுரை: சீராரும்-சர்வதுக்க நிவர்த்தி பரமானந்த பிராப்தி ரூபமுக்தியினை அடைவிக்கும் சிறப்பு பொருந்திய; பேராரும் - பெருமை மிகவும் பொருந்திய.

கருத்துரை: இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்யாகாரம் ஆகிய தர்மங்களை நியதி தவறாமல் சீராகச் செய்து, தாரணை தியானம், சமாதி சாதனைகளில் மனதைக் கட்டுப்படுத்தி வேகம் வைராக்கியத்தால் உயரும் உறுதிகொண்டு ஒன்றேயாகிய பரப்பிரம்மத்தை அவரவர் சீருக்குத் தக்கபடி உணர்த்திக் காட்டி அருள்புரிய வந்த பெரும் பேரருள் ஞான ஆசாரியராக அந்தக் கரணத்துள் உறையும் ஆத்மாவை சத்து, சித்து, ஆனந்தச்சிறப்பு பொருந்திய பரமார்த்த தரிசனம் என்னும் பிரம்மத்தை உணர்த்த வந்தவரோ.

2 ''திருத்தேரில் சாரதியாய்ச் சேர்ந்திருந்து
கீதையினால்
அர்சுனர்க்கு மெய்ஞானம் அனைத்தும்
உரைசெய்தவரோ''

பதவுரை: திருத்தேர்-அக்கினி தேவனால் கொடுக்கப்பட்ட திருவேயாகிய சிறந்த தேரில் கண்ணன் சாரதியாய் அமர்ந்திருப் பதால்.





கருத்துரை: பஞ்சதன் மாத்திரைகள் சேர்க்கையாய் சூட்சும மாகவும் பஞ்சபூத, பஞ்சீசரணச் சேர்க்கையால் ஸ்தூலமாகவும் சாரணசக்தியால் உடலுக்குள் ஆத்மா உறைவதால் திருவேயாகிய இவ்வுடல் என்னும் தேரில் இவையாவற்றையும் உள்ளிருந்தும் நிறைந்தும் தானாகவே காணப்படும் சர்வசாட்சியாய் சேர்ந்திருந் தும் கீதையினால் அர்சுனர்க்குபரமானந்த மெய்ஞானம் அனைத்தும் ஆத்ம, அனாத்ம பதார்த்தங்களின் இயல்புகளை அதிக பிரயாச மின்றி விளக்கமாய் நன்கு உணரச் செய்தவரோ.

3 ''செஞ்சடரில் பந்துசனம் சேதம்வரும்
என்றிரங்கி
அஞ்சினவன் பயந்தீர்த்தே அமர்செய்யச்
சொன்னவரோ

கருத்துரை: கடுமையான பெரும் போரினால் பந்து ஜனங்கள், தந்தைக்கு நிகரான பெரியோர்கள், தாத்தா, ஆச்சாரி யர்கள், நண்பர்கள் கொல்லப்படுவதால் இரக்கப்பட்டுவரும்.

நரகத்துன்ப பயமும், தன்தருமம் அழியுமோ என்ற அச்சமும் உடல் நடுங்கி மயிர் கூச்சல் உண்டாகி, குலப் பெண்கள் தம் கற்பை இழந்து கெட்டு அதர்மம் பரவ ஜாதி குல தர்மங்கள் அழி வதால் தனக்கும் நரகம் கிட்டும் என பயந்து அர்சுனனுக்கு மாவீர னுக்கு மனக்கலக்கம் பொருந்தாது, அறநெறி நிற்பவன் ஆரியன்; ஆண்மையை இழந்து பேதை போன்று நடப்பவன் அலி; பாவம் என்பது பயமும் பலஹீனமுமாம்; பேடித்தனத்தை அடையாதே; நிஸ்காமியமாய் உன் கடமையை தட்டாமல் செய்து, வரும் நல்ல பலனை ஆண்டு அனுபவி என துக்கத்தில் ஆழ்ந்த ஜீவனை தட்டி எழுப்பி அதர்மத்திற்கு எதிராக செஞ்சமர் தர்மயுத்தம் செய்யச் சொன்னவரோ.

4 ''சுற்றமறில் சோகமென சொல்லினைச்
சற்றறிந்தவன்போல்
கற்றுணர்ந்த பேரதனால் கலங்கார்காண்
என்றவரோ''

கருத்துரை: அரச இன்பத்தில் பேராசை கொண்டு முன்வந்து பெரும் ஆததாயினரான உறவினரை கொல்வதற்கு

பாவத்தைச் செய்வதற்கு துணிந்தவர்களானோம் என்று சற்று கேட்டு ஞானமடைந்தவனைப் போல் பேசிய அர்சுனனுக்கு, இந்த சிக்கலான நிலையில் க்ஷத்திரிய மேன் மக்களுக்கு சற்றும் ஒவ்வாத புறம்பான சுவர்க்கத்தை அளிக்காததும் புகழைத் தராததுமான மனக்கலக்கம் நீக்கமுற, தாற்காலிகமாக வந்துள்ள தளர்ச்சியை கோழைத்தனமான) உணர்வுகளை இழித்துப் பேசி கஸ்மலம் நீக்கி குழம்பிய மனம் உண்மையை உள்ளபடி ஓராது என கற்க வேண் டிய நூலைக் கற்று அறிய வேண்டிய ஆன்மாவை உணர்ந்த பெரி யோர்கள் பந்துக்கள் நாசமடைவதைப் பார்த்து துக்கத்தை அடைய மாட்டார்கள் என்று சொல்லி போர் புரியத் தூண்டியவரோ.

5 "கலங்காரோ விறப்புவரிற் கற்றுணர்ந்த
பேரேனு
மலங்காம னானிருக்கும் வகையுரையு
மெனவினவ"

பதவுரை : மலங்காமனான் — கலக்கமுறாமல் நான்

கருத்துரை : பூக்களைச் சொரிந்து பூசிக்கத் தக்கவர்களான துரோணர், கிருபாச்சாரியர், பீஷ்மர் மீது பாணங்களை எப்படி பிர யோகிப்பேன் அதனால் பொருளில் ஆசை கொண்ட ஆசாரியார் களைக் கொன்று நகர போகங்களை இவ்வுலகில் எப்படி அனுப விப்பேன். இரக்கத்தால் கடமையில் புத்தி திகைத்தவனும் இயற்கை குணங்களை இழந்தவனுமாகிய எனக்கு எது சிறந்த நன்மையை அளிக்கக்கூடியதாக இருக்குமோ அதை நிச்சயித்துக்கூறு, உன் னைச் சரண்புகுந்த எனக்கு கட்டளை இடு. கிடைத்தற்கரிய மானிடப் பிறப்பில் பரம் பொருளைப் பற்றிய ஞானத்தை அடை யாது போவோமாகில் அவன் அரிய வாய்ப்பை நழுவ விட்டவனா கிறான். நானும் கலங்காமல் இருக்கும் வகையுரையும், என் ஆன்ம ரதத்தின் கடிவாளத்தையும் நீங்கள் கைக் கொள்ளுங்கள் என வினவ.

6 நீயுநா னும்புவிமே னிருபர்களு
மெய்யுணர்வா,
லாயுங்காற் பிறந்திறப்ப தார்க்குமிலை
யென்றவரோ.



பதவுரை : மெய்யுணர்வால் — உண்மை அறியும் உணர்ச்சி யால்; ஆயுங்கால் - ஆத்மாவைப் பற்றிய உண்மையை ஆராய்ந்து பார்க்குங்கால்.

கருத்துரை : இவ்வுடலில் இளமையும் யௌவனமும் மூப்பும் உண் டாவதுபோல் ஆத்மாவுக்கு வேறுவுடல் எடுப்பதும் அமைகிறது. அறிவாளிகள் இறந்தவர்களைப் பற்றியோ, பிழைத்திருப்பவர்களைப் பற்றியோ, வந்து சேருவோருக்காகவோ வருந்த மாட்டார்கள். நீ, நான், நமக்கு முன்னால் பின்னால் இருப்பவர்களும், ஈரேழு புவி மேலிருப்பவர்களும் ஒரு சமயம் இல்லாமலிருந்து உண்டாவதில்லை; வரும் காலத்தில் இருக்கமாட்டோம் என்பதுமில்லை. எங்கும் எப் போதும் இருக்கும் ஆத்மா அழிவற்றது. இறப்பு ஓர் கூடாரம்தான்; உயிர் மூச்சின் நிறுத்தம் உலவி வரும் காற்றின் முத்தாய்ப்பு இல்லை. உயிரின் பயணம் முடிவில்லாதது. உடல் பின் தங்கி விடுகிறது என்றவரோ.

7 ஈங்கெவர்க்கும் பிறந்திறப்ப தில்லையென்றீ
ரிவ்வுலகி,
னீங்குபவ மார்க்கிதனை நிச்சயமாய்ச்
சொல்லுமென,

பதவுரை : நீங்குபவம்—இறத்தலும் பிறத்தலும்; நிச்சயமாய் உறுதியாக.

கருத்துரை : இவ்வுலகில் எவர்க்கும் பிறப்பு இறப்பு என்ப தில்லை யெனில், உடல் இறப்பதும் பிறப்பதும் கேட்கிறோம் பார்க்கிறோம். ஐம்புலனால் உணரப்படுவது இல்லை என்பது எப்படி? உள்ளது எது என்று தேடுவது உயிர்களின் இயல்பு. இருப்பதை உரியதாக்கிக் கொள்ளச் செய்யும் முயற்சியே வாழ்க்கை என்று அழைக்கப்படுகிறது. செவி, கண் முதலிய ஐம்புலன்கள் அத னதன் புலனாகிய ஒலி, வடிவம் முதலியவைகளில் உலவுகின்றன. பொருள்கள் புலன்கள் வாயிலாகச் சேர்வதால் உடலின் கண் இன்ப துன்பங்கள் தப்பாமல் வந்தமையும். இவ்வுடலைத் தான் என்பவன் துன்புறுவது திண்ணம். இந்தப் பிரபஞ்சத்தில் அடையப்படும் இறப்பு பிறப்பு யாருக்கு? இந்த உண்மையை எனக்கு விளங்கும்படி சொல்லி அருள வேண்டுமென,

8 இத்தரையிற் பிறந்திருப்ப தெடுத்தவுடற்
கடுத்தபொறி,
நித்தியமா கியவான்மா நின்
சொரூபமென்றவரோ,

பதவுரை : எடுத்தவுடற்கு — முன் கர்மாதீனமாகப் பிறந்த சரீரத்திற்கு; அடுத்த பொறி - கிட்டிய தன்மையாம்.

கருத்துரை : பொறிகள் புலன்களிடத்துப் பொருந்துதலால் இன்பம் துன்பம், குளிர், வெப்பம் முதலியன உண்டாகின்றன. தோன்றுதலும் மறைதலும், நிலையாமையும் அவைகளின் இயல்பு. இப்பிறப்புக்கு முந்திய பலப்பல ஜன்மங்களின் கர்மாதீனமாக கிட்டிய இப்பிறப் பின் தன்மையால் இவ் வாழ்க்கை அமைகிறது. பழுதுபட்ட துறப் பதற்கான துணிகளைக் களைந்து விட்டு மனிதன் புதியவைகளைப் போட்டுக் கொள்வதுபோல் ஆத்மா பழைய உடலங்களை நீத்து புதியன புகுகிறது. உடல் கொல்லப்படுமிடத்தும் ஆத்மா கொல்லப் படுவதில்லை. இந்த உலகங்களில் பிறப்பது இறப்பது ஊழ் வினைப்படி வந்த தூல உடம்புக்குக் கிட்டிய கடமையாம். சத்து சித்து ஆனந்தமாகிய ஆன்மாவே நின் உண்மை சொரூப மென்றவரோ,

9 அங்கமுயி ரிந்தியநா னன்றிவே
றெனைக்காணே,
னிங்குயான் வேறுண்டே லெனக்கறியப்
புகலுமென,

பதவுரை : அங்கமுயிரிந்தியம் — தூலசரீரம், ஐந்து வாயுக் களும் பத்து இந்திரியங்களும்.

கருத்துரை : உடல் உயிர்க் காற்றுக்கள் கர்மேந்திரியங்கள் ஞாநேந்திரியங்கள் இவைகளையே நானென்று அறிகிறேனேயன்றி இவற்றுக்குப் புறம்பாக நான் என்னை வேறாகக் காணக் கூடவில்லையே; இவ்வுடல் வாழ்வில் என் சொரூபம் இவைகளுக்கு வேறுண்டேல் எனக்குப் புரியும்படி விவரம் கூறுமென ஞானிபோல் பேசி அஞ்ஞானிபோல் விசனப்பட்டவற்கு,



10 மெய்யுயிரிந் தியங்களல்லால் வேறறியே
னென்றவனைப்
பையவவை யாலறியப் படானுநீ
யென்றவரோ

பதவுரை : பையவவையால் — சிறியோனே! மேற்கூறிய சரீரவாயு இந்திரியங்களால்.

கருத்துரை : மெய்யென்ற உடல் உயிரான பிராண வாயுக் கள் கர்ம ஞான இந்திரியங்களல்லாது ஆத்மா எனப்படும் பரப் பிரம்மத்தை இருப்பதாகவும் வேறானதாகவும் அறிய முடிய வில்லை யென்றவனை, குழந்தாய், உடல் உயிர் இந்திரியங்கள், தாதுக்கள் தோன்றி மறைபவை (அசத்து) நிலையற்றவை. இயற்கையாகிய மாயையால் பிரதிபலிக்கப்படுவது ஜடம்; ஆனால் உண்மையான நீயாகிய ஆத்மாவோ காலத்தால் இடத்தால் அவஸ்தையால் குணத் தால் விகாரப்படாதது. சத்து, சித்து ஆனந்த வடிவமானது பரிபூரணமானது, அறிவு வெளியாகிய சிதாகாசத்தில் யாவற்றுக்கும் சாக்ஷியாயுள்ளது. அவ்யக்தமாகிய ஆத்மா தோன்றி மறையும் உடல் உயிர் இந்திரியங்களுக்கு எட்டாப் பொருள், ஜடமாகிய இவை எவற்றாலும் உணரப்படாதது. விவேக வைராக்கிய ஞானத்தாலே உணரத்தக்கது. உடலொரு சட்டை ஒருநாள் அழியும்; உள்ளுரை ஆன்மா புதுவுடை அணியும்; வெள்ளமும் கரைக்காது; வெந்தனல் எரிக்காது; வாயுவும் உலர்த்தாது; வாளேதும் வீழ்த்தாது. பிறப்பு ஜீவனுக்கு ஏற்படுகிறது; ஆன்மாவுக்கு இல்லை; ஆன்மா காலனின் வரையறைக்கும் அப்பாற்பட்டது. இறப்பவன் மறுபடியும் பிறக்கத் தான் செய்கிறான். இது ஒரு நிலையான உண்மை; சாஸ்வதமான சத்தியம். நித்தியமான சத்தியத்தை யாரும் நிலை குலைக்க முடி யாது. அறிவு சொரூபனான உன்னால் இவைகள் விளங்குகின்றன என்றவரோ.

11 தேகம்வே றாகிலத்தைச் சேர்ந்ததிவ
ணேதெனவே
சோகமே விளைகருமத் தொடர்ச்சியினா
லென்றவரோ

பதவுரை : சேர்ந்ததிவண் — அவ்வாத்மா பொருந்திய இவ்விடத்து.

கருத்துரை : தேகம் ஆத்மாவுக்கு வேறாகில் ஆத்மா எதனால் தேகத்துடன் சேர்ந்ததென வினவ; ஆன்மாக்கள். மனம் வாக்கு காயம் என்னும் மூன்றினாலே செய்த புண்ணிய பாவங்கள் கன்மங்களாகும். இவை எடுத்த எடுப்பிலே செய்யப்பட்டு வரும் கருமம் ஆகாமியம் (நிகழ்வினை) எனப்படும். பிறவிதோறும் இவ்வாறு ஈட்டப்பட்டுப் பக்குவமடையும் வரையில் புத்தி தத்துவம் பற்றுக்கோடாக மாயையிலே கிடக்கும்போது சஞ்சிதம் (தொகைவினை (அ) இருப்புவினை) எனப்படும். இவ்வாறு சஞ்சித கன்மங்களுக்குள்ளே பக்குவப்பட்டவை மேல் எடுக்கும் உடலையும் அதன் மூலம் அனுபவிக்கப்படும் இன்ப துன்பங்களையும் தந்து பலன் விளைவிக்கிற போது பிரார்த்தம் (துவக்கவினை (அ) நுகர்வினை) எனப்படும். மாயையினால் மறைக்கப்பட்டு ஆத்மாவை உணராமல் சோகமே விளைவிக்கும் (கருமவினை சம்பந்தத்தால்) கன்மத் தொடர்ச்சினாலென்றவரோ.

12 தேகமெடா முன்கருமச் செயல்வருமா
றேதெனவே
யேகமா மரமும்வித்து மெனுமுறையோ
லென்றவரோ

பதவுரை : தேகமெடா — சரீரம் எடுத்ததற்கு; யேகமா — சமகாலம்.

கருத்துரை : புதிதாக வந்த இந்த உடலுக்கு முன்ஜன்ம வினை வருவதெப்படி என வினவ, சிறு ஆலம் விதையிலிருந்து செடியாகி மரமாகி காயாகி பழமாகி அதில் விதையுமாகி மறுபடியும் வளர்வதுபோல், சஞ்சித பிரார்த்த கர்மவினையினா லென்றவர், மரம் முன்னதா, வித்து முன்னதா என்பதை நிருபிக்கக் கூடாதது போல், கருமம் முன்னதா என்பதை நிருபிக்க முடியா தென்றவரோ.

13 காயமுந்தா னும்பிறிதேற் கன்மமெவர்
செய்தெனத்
தீயவுடற் கலதுகன்மச் செயறனக்கே
தென்றவரோ



பதவுரை : கன்மமெவர் — பாவப் புண்ணியச் செயல் செய்தது ஆன்மாவா, சரீரமா? தீய — குற்றம் பொருந்திய.

கருத்துரை : உடலும் ஆன்மாவும் வேறு வேறெனில் நல்ல, கெட்ட கர்மங்கள் செய்வது எது என வினவ தொழில் வடிவ வினைகள் கெட்ட சரீரத்திற்கு அல்லாமல் ஆத்மாவாகிய தனக்கு இல்லை. போக ஐசுவரியத்தில் பற்றுடையவர் காமிய கரும விசேஷங்கள் நிறைந்தன வாயும் புதிய பிறவிகளை உண்டு பண்ணுவன வாயும் இருக்கும். வேத கரும காண்டப் பகுதி இந்திரிய சுகம் நாடுவோர்க்கு பயன்படும் பரிபூரணமடைவதே முடிவான இலட்சியமாகும். அதற்கு ஞானத்திலும் யோகத்திலும் விவேகமான உறுதியான உள்ளம் வேண்டும். ஸத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணமயமாய் இருப்பது சுவர்க்கங்கள் அனைத்தும் அடங்கியது பிரபஞ்சம். அதன் பொருள்களைத் தேடித்திரியும் யோகமும் அவைகளை காப்பாற்றிவைக்கும் க்ஷேமமும் மனதை கலக்குகின்றன. இன்பம், துன்பம், வெற்றி, தோல்விகளை சமனாகக் கருதி அறப்போர் ஆகிய இந்த யுத்தத்தை க்ஷத்திரியனாக ஸ்வதர்மத்தை செய்து கீர்த்தி அடைவாயாக. பாபத்தை அடையாய், முற்றும் தூயதான ஆத்மாவை நிஷ்காம்யமாகச் செய்யும் கர்மபலன் சென்று அணுகாது என்று கூறியவரோ.

14 படர்கருமம் உடல்செய்யில் பலமுறுவ
தார்க்கெனவே
அடர்பலமும் உடற்கேயாம் அறிவார்க்கே
தென்றவரோ

பதவுரை : படர்கருமம் — விரிந்த சுப அசுப செயல்கள், அடர் பலமும் — நெருங்கிய சுக துக்கங்களும்; அறிவாற்கு — அறிவதாகிய ஆத்மாவிற்கு.

கருத்துரை : விரிந்த சுப அசுப செயல்களாய் பலவித கருமங்களை உடல் செய்வதின் பலன் எதற்குப் போய்ச் சேருகிறதென்று வினவ, நெருங்கி நிறைந்த சுக துக்கங்களாகிய பலன்களும் ஜடமாகிய உடலுக்குரியதே யன்றி தூய அறிவாகிய ஆத்மாவிற்கில்லை. கடவுள் சன்னிதானத்தில் பேரின்பம் அடையப் பெற்ற ஆத்மாவானது அற்பமாகிய உலக இன்பங்களில் ஆசை வைப்பதில்லை. வினையாற்றக் கடமைப் பட்டுள்ளாய், வினைப் பயனில் ஒரு போதும் உரிமை பாராட்டாதே. சாட்சியாக பார்த்துக் கொண்டு

இருக்கும் ஆத்மாவிற்கு கரும வினையின் பலன் வரவே வராது என்றவரோ.

15 வெய்யவினை உடற்கென்னால் மெய்யிங்கேவிழ
ஆன்மா
ஐயம்அற நரகசொர்க்கம் அநுபவிப்ப
தேதெனவே

பதவுரை: வெய்யவினை — கொடிய செயலின் பயன்கள்; ஐயம்அற — சந்தேகமில்லாமல்.

கருத்துரை: கர்ம வினைப்பயன் உடலுக்குத்தான் ஆத்மா விற்கில்லை யெனில் இறந்த பின் இந்த ஆத்மா நரக துக்கமும் சொர்க்க சுகமும் அனுபவிப்பது எப்படி ஏன் என்ன காரணம் என கேட்க.

16 அனுபவமே இலையது வீண் ஆரோபிதம்
நிகழ்த்தில்
தனுகரணச் செயல்தனதாச் சார்வதுபோல்
என்றவரோ

பதவுரை: அனுபவமேயிலை — உண்மையாக அனுபவிப் பது இல்லை; வீண் ஆரோபிதம் — வீணான பொய்த் தோற்றம், தனுகரணச் செயல்தனதாச் — தூல சரீரம், பத்து இந்திரியங்கள், அந்தக் கரணங்கள் செயல்களைத் தனதாக.

கருத்துரை: நரக துக்கம் சொர்க்க சுகம் ஆத்மா அனுபவிப் பதாக நீ எண்ணுவது வீணான மயக்கம். எவ்விடத்தும் சரிதமே தான் கருமம் செய்வதும் அதன் பலனான துக்க சுகங்களை அனுப விப்பதும்; ஆத்மா எங்கும் கருமம் செய்வதும் இல்லை. துக்க பலன் அனுபவிப்பதும் இல்லை. கிளிஞ்சலில் வெள்ளி தோன்றுவது போலும், திரையில் நிழல் படம் தோன்றி மறைவது போலும் பொய் யாக பூர்வ ஜன்ம கர்மவாசனைகள் இந்திரியங்கள் அந்தக் கரணங் களினது தன்னைச் சார்வது போல் என்றவரோ.



17 மற்றுடலின் செய்கைதன்மேல் வருமயக்க
மேதெனவே
முற்றுணர்வொன் றில்லாத மோகமென்று
சொன்னவரோ

பதவுரை: வருமயக்க — சரீரச் செயல்கள் தனதாக வரும் பிராந்தி; மோக மென்று — மயக்கம் என்று.

கருத்துரை: பூர்வ ஜன்ம கர்ம வினைப்பயன் இந்த ஜன் மத்தில் வந்து தனக்கு துன்பங்கள் கொடுப்பது எதன் பொருட்டு என வினவ; மனன சீலத்தையுடையவன், தைலதாரை போன்று யாருடைய மனது இடையறாது ஆத்ம சொருபத்தில் போய்க் கொண் டிருக்கிறதோ அம்மனிதன் முனியாகிறான். மேதை நாடி வளர்கி றது. ஞானியாகிறான். நெறி நிற்கும் நல்லறிஞனுடைய மனதையும் கொந்தளிப்புள்ள இந்திரியங்கள் பலவந்தமாகப் பற்றியிழுக்கின்றன. பொருள்களை நினைப்பதால் பற்றுண்டாகிறது; பற்று ஆசையாகப் பரிணமிக்கிறது. ஆசை சினமாக வடிவெடுக்கிறது. சினத்தால் மனக் குழப்பம் குழப்பத்தால் நல் நினைவின்மை; நினைவு நாசத்தால் புத்தி நாசம்; புத்தி நாசத்தால் ஆள் அழிகிறான். மனமடங்காத வனுக்கு ஆத்ம போதமில்லை. ஆத்ம பாவனையில்லை. ஆத்மத் தியான மில்லாதவனுக்கு சாந்தி கிடையாது, இன்பமில்லை. மன மயக்கம் திருத்தமான பகுத்தறிவு இல்லாத மயக்கத்தாலுண்டாகின் றன. ஆத்மாவை முற்றும் உணராமல் மோகத்திற்காட்பட்டதனால் என்றவரோ.

18 அறிவுதே கந்தனக்கோ வாந்மாவிற்
கோவெனவே
பிறிவுசெயி வசித்துடலம் பிரமமறி
வென்றவரோ

பதவுரை: அசித்துடலம் - உடம்பு ஜடம்

கருத்துரை: அறிவுத் தன்மை உடலுக்கா ஆன்மாவிற்கா என கேட்க, நிலையற்று பிறிந்து உறுமாறும் உடலுக்கு ஜடமாகிய அந்தக் கரணமும்; அறிவுத்தன்மை பிரம்மத்திற்கு (ஆன்மாவிற்கு) என்றவரோ.

19 தேகமசித் தாகிலிந்தச் செயல்வருவ
தேதெனவே
யேகபரஞ் சோதியின்முன் னிருக்கையினா
லென்றவரோ

பதவுரை : தேகமசித்தாகில் — உடம்பு அறிவிலி ஆனால்; பரஞ்சோதியின் — பிரம்மப் பிரகாசத்தின்.

கருத்துரை : உடம்பு அறிவிலி ஜடமானால் இந்த பாவ புண்ணியத் தொழில்களை கர்மேந்திரிய ஞானேந்திரிய அந்தக் கரணங்கள் உடலில் செயல்படுவது எப்படி என வினவ; பிரகிருதி யினின்று உதித்த குணங்களால் ஒவ்வொரு உயிரும் தன்வயமின்றி கர்மம் செய்விக்கப் படுகின்றது. அணுமுதல் அண்டம் வரையில் எல்லாம் அசைகின்றன. அதில் பிணிக்கப்பட்டுள்ள உயிர்க்குக் கர்மத்தை விடும் சுதந்திரம் கிடையாது. அக்னியின் குணம் கண் ணாக வடிவெடுத்து அக்கினியின் குணமாகிய வெளியுலக ஒளியை நுகர்கிறது. பஞ்சேந்திரியங்களுக்கு இக்கோட்பாடு பொருந்தும்; ஆத்ம சைதன்யத்தை இவை வந்து தொடுவதில்லை. ஒன்றாகவும் மேலான அறிவு சொருபமாகவும் உள்ள ஆத்மாவின் முன்னால் இருக்கக் கூடிய தன்மையினால் பிரகிருதியின் முக்குணங்களால் யாண்டும் கர்மங்கள் செய்யப்படுகின்றன. அகங்காரத்தால் மோக மடைந்தவன் நான் கர்த்தா என்று நினைக்கிறான்.

20 இருக்கினும சேதனத்துக் கிச்செயலுண்டோ
வெனவே
யுருக்குபடாக் காந்தமுன்னி லூசிநிக
ரென்றவரோ

பதவுரை : அசேதனத்துக்கு — சடமாகிப உடம்புக்கு; யுருக்குபடா — உருக்கு படாத.

கருத்துரை : இருப்பினும் சேதனமாகிய அறிவுக்கு ஆத்மாவிற்கு கர்மவினை சாருமோ; ஆத்மாவின் முன்னிலையில் மலை, ஆறு முதலிய ஜட உலகங்களைப் போல ஜடமான உடம்பு இருந்தாலும் ஜடமான இந்த உடம்புக்கு மாத்திரம் பாவ புண்ணியச் செயல் களைச் செய்யும் சாமர்த்தியம் உண்டாகுமோ என வினவ; அழுக் கால் மூடப்பட்ட உருக்கால் செய்யப்பட்ட ஊசி காந்தத்தால்



கவரப்படுவதில்லை. ஆனால் தூயதாய் உள்ள ஊசி காந்தத்தால் கவரப்படுவது போல் மனமாசு அற்ற ஜீவன் ஆத்மாவால் எளிதாகக் கவரப்படுகிறது. நெருப்பானது புகையினாலும் (சத்துவ குணத்தில் எளிதாகவும்) கண்ணாடி அழுக்கினாலும் (ரஜோ குணத்தில் சிறிது சிரமம் முயற்சி செய்தும்), சிசு கருப்பையினாலும் (தமோ குணத் தில் காலக் கிரமத்தில்தான் தக்க ஆயத்த வாழ்க்கையால்தான்) மூடப்பட்டிருப்பது போன்று ஞானம் ஆசையினால் மூடப்பட்டிருக் கிறது. சுடப்படாத காந்தத்தின் முன்னால் வைத்த இரும்பு, பொன் முதலியவைகளாகிய ஊசிகள் இருந்தாலும் இரும்பு ஊசி மாத்திரம் காந்தத்தால் கவரப்பட்டு நகர்ந்து வருவது போல் ஆத்மாவின் பக்கத்தில் எவ்வளவு ஜடப் பொருள்கள் இருந்தாலும் மனம் முத லிய அந்தக்கரண உள் கருவிகளோடு கூடிய உடம்பு மாத்திரம் தான் புண்ணிய பாவச் செயல்களைச் செய்யும், மற்ற ஜடப் பொருள்கள் பாவ புண்ணிய தொழில் செய்யாது என்றவரோ.

21 சொன்னசெய லுடற்கானாற் சுகதுக்க
மியார்க்கெனவே
யன்னசுக துக்கமுந்தா னவ்வுடற்கே
யென்றவரோ

பதவுரை : செயலுடற்கானால் — தொழில்கள் உடம்புக்கு ஆனால்.

கருத்துரை : சொல்லப்பட்ட நல்லதும் கெட்டதுமாகிய தொழில் களை உடம்பு செய்யுமானால் அதன் பலன்களாகிய சுக துக்கங் களை அனுபவிப்பது யார் என்று கேட்க; அந்த சுக துக்கங்களும் அந்த உடம்புக்கே என்று அருளியவரோ. ஸ்தூலமான உடலை விட சூட்சுமமான இந்திரியங்கள் பொறிகள் பெரிதாம். அவற்றி னும் சூட்சுமமானது மேலானது. உணரவல்லது. மனம், புத்தியோ நிச்சயிக்கிறது. மனதை விடப் பெரியது. புத்திக்கும் உயர்ந்தது. தூயதான ஜீவாத்மா. இங்ஙனம் நுண்ணியதற்குப் போகப் போக ஆசையின் வலிவும் பந்தமும் அதிகரித்துக் கொண்டே போகிறது. அதனால் ஜீவபோதம் தடிக்கிறது. துன்பமே அதிகரிக்கிறது. இந்தி ரியங்கள், மனது, புத்தி யாவும் பரமாத்மாவைச் சார்ந்து அருள் தாகம் பெருக்கெடுக்கும் பொழுது விஷய ஆசை அடிபடுகிறது. ஜீவபோதம் தேய்கிறது. பரபோதம் வளர்கிறது. பேரானந்தம் ஊற்றெடுக்கிறது.

22 சேதகமா மாங்மாவைச் சேராத துக்கசுக
மோதுசட மாமுடலை யுற்றிடுமோ
சொல்லுமென

பதவுரை : ஓதுசடமாம் — சொல்லப்பட்ட அறிவின்றிய; யுற்றிடுமோ - பொருந்துமோ.

கருத்துரை : அறிவு வடிவதன் சொருபத்தை பொருந்தாத துக்க சுகங்கள் பொய்யென்று சொல்லப்படுகின்ற ஜடமாகிய உடம்பை பொருந்துமோ சொல்லி அருளும். காம வடிவெடுத்ததும் நிரப்பமுடியாததும், போதும் எனாததுமாகிய ஆசையினால் ஞானம் மூடப்பட்டிருக்கிறது. புத்தியிலும் மேலான ஆத்மாவால் ஆத்மாவை அடக்கி, வெல்ல முடியாததும் ஆசை வடிவுடையதுமாகிய சத்துருவை அழித்து விடு.

23 பூதமைந்தோ டைந்துயிர்கள் புலன்கள்பத்து
மநமுதனான்
கீதிருமெயிதின் மனத்துக் கின்பதுன்ப
மென்றவரோ

பதவுரை : பூதடைந்து — தூல பஞ்சபூத காரியமான தூல சரீரம்; ஐந்துயிர்கள் - பிரானன், வியானன், அபானன், சமானன், உதானன், புலன்கள் பத்து — கர்மேந்திரியங்கள் 5, ஞானேந்திரியங்கள் 5, மநமுதனான்கு — மனம், புத்தி, சித்தம், அகங்காரம், மநத்துக்கு — மன விருத்துக்கு எண்ணத்திற்கு.

கருத்துரை : காரியமான ஆதி மண்ணியல்பால் உருவான ஸ்தூல சரீரம் ஒன்று; பஞ்சவாயுக்கள் 5 புலன்கள் 10 அந்தக்கரணங்கள் 4 ஆக 19, சூட்சும சரீரம் ஒன்று ஆக இவ்விரண்டு சரீரங்கள் தூல உடல் சுட்சும உடல் என்று இரண்டு உடலாம். இந்த இரண்டு உடல்களில் சூட்சும உடலில் உள்ள மனத்திற்கு சுக துக்க அனுபவமாம். இவற்றின் இன்பதுன்பங்கள் ஆன்மாவிற்கு இல்லை என்றவரோ.

24 இந்தவிரு வகைத்தநுவிற் கேதுவே
தெனவினவ
முந்தியகா ரணமதனான் மூன்றுதநு
வென்றவரோ



பதவுரை : விருவகைத்தநுவிற்கு — ஸ்தூலம், சூட்சுமம் எனும் இருவகை சரீரங்களுக்கு, கேதுவேதென — காரணம் என்ன என, முந்திய காரணம் — அநாதியான அஞ்ஞானமாகிய காரண சரீரம்; மூன்றுதநு — ஸ்தூலம் சூட்சுமம், காரணம் ஆகிய மூன்று சரீரங்கள்.

கருத்துரை : இந்த 2 சரீரங்களுக்கு காரணம் என்ன எது என வினவ அநாதியாம் காரண சரீரம் அவித்தையாகிய காரண சரீரமொன்றிருப்பதால் பருவுடல், நுண்ணுடல் ஆகிய இரண்டிற்கும் காரண வித்தாக விளங்குவது, இதைச் சஞ்சித கன்மம் என்று கருதலாம், ஆக ஸ்தூலம், சூட்சுமம் காரணம் உடல்கள் மூன்று என்றவரோ.

25 மநமறியுந் துக்கசுக வரவென்றீ ரம்மநமும்
வினவில்சே தருமலவோ விரித்தெனக்கு
விளம்புமென

பதவுரை : வினவில் — விசாரணை செய்யுங்காலத்து.

கருத்துரை : துக்க சுக வரவு மனம் அறியும் அநுபவிக்கும் என்றீர், அம்மனமும் விசாரிக்கும் போது ஜடமல்லவோ, விபரமாய் அசேதனமாகிய அறிவற்றது எப்படி அறியும் என எனக்கு விளக்குவீர் என.

26 அம்மநத்தி லாங்மா வபேதம்போற்
றோன்றுதலால்
விம்முதுக்க சுகத்தைமந மேவுமென்று
சொன்னவரோ

பதவுரை : அபேதம் போல் — ஒன்றுபட்டது போல்.

கருத்துரை : ஆராய்ந்து பார்க்காத மனத்தினான் ஜீவனுக்கு உடல் முதல் ஆன்மாவரை எல்லாம் ஒன்றுபட்டதுபோல் பேதமற்று தோன்றுதலால் க்ஷணத்தில் தோன்றி மறையும் தொடர்ந்து பெருகி வந்து கொண்டே இருக்கும் ஆசைகள் மிகுதியும் சுகசுக்கங்களை மனமானது அடையும் அவித்தையில் பிரதிபலித்துத் தோன்றுமென்றவரோ.

27 அந்தமனோ துக்கசுக மதனிடத்து நில்லாமல்
வந்திலங்கு மான்மாவை மருவிதென்
சொல்லுமென

பதவுரை : வந்திலங்கு — உண்டாகி ஒன்றுபோல் விளங்கும் மருவியது — பொருந்தியது.

கருத்துரை : மனத்தில் தோன்றும் துக்கமும் சுகமும் மனத்திடத்து நில்லாமல் சுயம் ஜோதியாய் விளங்கும் ஒளிமிக்க ஆன்மாவை வந்து பொருந்தியது யாது காரணம் சொல்லுமென,

28 வெய்யகன லின்சூடு மேல்வைத்த சட்டியினூ
டுய்யபுன லூடுவந்தங் கொன்றுதல்போ
லென்றவரோ

பதவுரை : சட்டியினூடுய்ய — பாத்திரத்தில் ஊற்றின புனலூடு — தண்ணீரிடத்தில்.

கருத்துரை : அடுப்பிலுள்ள நெருப்பின் சூடானது அடுப்பின் மேல் வைத்த சட்டியிலும் அதனுள் வைக்கப்பட்டிருக்கும் நீரிலும் பதார்த்தங்களிலும் பரவி அவைகளையும் சூடு பெறச் செய்வது போல் சரீரமாகிய அடுப்பில் மனமாகிய பாத்திரத்தில் உள்ள ஆத்மாவாகிய ஜலத்தில் மயக்கத்தினால் சுக துக்கங்கள் சேர்ந்தது போல் தோன்றுகிறது.

29 சித்தாகு மான்மாவுஞ் செடமாகுஞ் சித்தமுந்தா
னொத்தாங்கி ரண்டுமொன்றா யுற்றவகை
சாற்றுமென

பதவுரை : சித்தாகும் — அறிவு வடிவமாகிய சித்தமும் — மனமும், னொத்தாங்கி — ஒன்றானது போல.

கருத்துரை : சித்தம் (அறிவு) ஆகும் ஆன்மாவும், ஜடமாகிய அந்தக்கரண சித்தமும் (மனமும்) ஆத்மாவும் மனமும் ஒன்றாகச் சேர்ந்த விதத்தை ஒன்றில் ஒன்று இணைந்து இரண்டும் ஒன்றா இருக்கும் விதமெப்படியென விளக்கிக் கூறும் என.



30 வல்லிரும்பு கனலுடனே மருவியது போல்மனமு
மொல்லையிலாங் மாவுடனே யுற்றதுகா
ணென்றவரோ

பதவுரை : மருவியது — பேதமற்று பொருந்தியது.

கருத்துரை : ஸ்தூலமும் சுயப்பிரகாசம் இல்லாததும் கருநிறமும் ஆன வலிமை பொருந்திய இரும்புத் துண்டு கொல்லன் பட்டறையில் சூட்சுமமும் பிரகாசமும் செந்நிறமுமென நெருப்பில் காய்ச்சப்பட்ட பொழுது நெருப்பின் வலிமையால் இரும்புத்துண்டு நெருப்போடு ஒன்றாய்ச் சேர்ந்து நெருப்பாகவே மாறிவிடுவது போல் தூய ஆத்மாவில் கலக்கும்பொழுது ஜடமும் பரிச்சின்னமும் சஞ்சலமுமான மனமும் சித்தும் அபரிச்சின்னமும் அசஞ்சலமுமான ஆத்மாவோடு அனாதியாகவே சேர்ந்தது. மனமும் ஜடமேயாகிலும் உருகி ஆத்மாவாகவே மாறி விடுகிறது.

31 உற்றதெத னாலெனவே யுள்ளமவி வேகமுறப்
பற்றியதன் மேலுமதன் பண்புவந்த
தென்றவரோ

பதவுரை : அதன் பண்பு — மனதின் சுகதுக்க இச்சையாதி தர்மங்களாய சுபாவம்.

கருத்துரை : ஆத்மாவோடு மனம் சேர்ந்தது எக்காரணத்தால் என்று கேட்க மனமானது ஆத்மா அனாத்மாக்களை பகுத்து அறியும் விசாரம் இன்மையால் சேர்ந்து தோன்றுகிறது. ஆத்மாவின் கண் மனதினது ஆசை, கோபம் முதலிய குணங்களெல்லாம் மயக்கத்தால் சேர்ந்து தோன்றுகின்றன ஆத்மாவில் ஒன்றுபட்டு உறைந்த உள்ளம் விவேகம் பெற ஆத்மாவைப் பற்றியதால் தூய மேன்மையான தர்மங்களாய சுபாவம் வந்ததென்றவரோ.

32 அடுத்தகுணம் போமோபின் னான்மாவை
விட்டெனவே
யெடுத்தசெம்பு நிறம்படிகத் தேறுதல்போ
லென்றவரோ

பதவுரை : அடுத்தகுணம் — சம்பந்தித்த குணம், செம்பூ நிறம் — செம்பரத்தம்பூவின் சிகப்பு நிறம்; படிகத்தேறுதல்—படிகக் கல்லில் சிகப்பு நிறம் ஏறித் தோன்றுதல்.

கருத்துரை : தன் சொருபத்தை வந்து பொருந்திய மனத்தின் குணங்கள் ஆத்மாவை விட்டு நீங்குமோ என்று கேட்க, சுத்த ஸ்படிலிங்கத்தின் பக்கத்தில் வைக்கப்பட்ட அன்று பறித்த செவ்வரத்தம்பூவின் சிகப்பு நிறம் தூய ஸ்படிகத்தில் பட்டு லிங்கம், பூவின் சிகப்பு நிறமாகக் காணப்படுவது போல் அந்தக்கரணத்தின் சத்துவ ரஜோ தமோ குணங்கள் சுத்த ஆத்மாவை பஞ்சகோசங்களால் உறையிட்டு அவ்வக்குணத்தின்படி ஆன்மாவை பிரதிபலிக்கும். ஆனால் பகுத்தறியும் விவேகி பூவின் நிறத்தை விலக்கி வெண்மை ஸ்படிகம் என்று அறிகிறான். பூவை அப்புறப்படுத்தி விட்டால் செந்நிற மயக்கமே ஸ்படிகத்தில் தோன்றாது. ஆத்மாவாகிய எனக்கும் மனத்திற்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை எனப் பிரித்துப் பார்த்தாலும் அல்லது மனத்தை அடியோடு அப்பியாசத்தால் அடக்குதல் செய்துவிட்டாலும் ஆத்மாவில் மனத்தின் குணம் தோன்றாது.

33 சுத்தபடி கம்போற்சொ ரூபமாய்த் தானிருக்க
மெத்தவுமா சாமலின மேவியதென்
சொல்லுமென

பதவுரை : மெத்தவுமாசா மலினமேவிய — மிகவும் ஆசையாகிய களங்கம் ஆத்மாவினைப் பொருந்தியது.

கருத்துரை : சுத்த ஸ்படிகம் போல் தூய்மையாய் ஆன்ம சொருபமாய் தான் இருக்க மிகவும் ஆசையாகிய களங்கம் ஆத்மாவினைப்பொருந்தியது யாதுகாரணம் விளக்கிக் கூறுமென.

34 அகாதியாம் வாசனையா லடைந்ததா சாமலிந
மனோபந்த மிருக்கின் முத்திவாராதென
றுரைத்தவரோ



பதவுரை : வாசனை — அந்தக்கரண ஸம்ஸ்காரம் ஆசாமலிந — தேகாதிகளில் பிரியமாகிய களங்கம்; பந்தம் — கட்டு, முக்தி — சர்வ துக்க நிவர்த்தி பிரமானந்தப் பிராப்தி வடிவமானது மோட்சம்.

கருத்துரை : ஜீவன் தனது பலகோடி பிறப்புகளில் செய்த கருமங்களின் வாசனாதி பலன்கள் சஞ்சிதமாய் மலை போல் குவிந்திருக்க அந்தக்கரணங்கள் கட்டுப்பட்டிருப்பதால் முன் ஜன்ம வாசனையால் ஆசை முதலிய துர்க்குணங்கள் ஆத்மாவில் தோன்றுகின்றன, மனத்தோடு ஆத்மாவின் ஒற்றுமை மயக்கம் உள்ள வரைக்கும் மோட்சம் கிடைக்காது முக்தி வாராது என்றுரைத்தவரோ.

35 பந்தமெது முக்தியெது பகுத்துரைக்க
வேண்டுமென்றன்
சிந்தைதெ ளியவென்று திருத்தாளி
னைவணங்க

கருத்துரை : ஜீவாத்மாவுக்கு கர்மங்களின் கட்டு எப்படிப் பட்டது ஜீவன் முக்தி அடைவதன் பொருளென்ன என்ற பாகுபாட்டை பிரித்துச் சொல்லி எந்தன் சிந்தை தெளிய விளக்கியுரைக்க வேண்டுமென வணங்கிக் கேட்க.

36 தேகாதி தானெனவே சேரபிமா நங்கள்பந்த
மாகாத மாநம்விடி லரியமுத்தி யென்றவரோ

பதவுரை : சேரபிமாநங்கள் — பொருந்திய பற்றுக்கள் விடிலரிய — நீங்கில் துர்லபமான.

கருத்துரை : தேக முதலியவை நான் என்று கொண்டுள்ள அபிமானமே பந்தமாகும். தேகாதிகளில் நான் எனதென்ற அபிமானம் நீங்கில் சிறந்த மோட்சமாம். உடல் கர்மஞான இந்திரியங்கள் அந்தக்கரணங்கள் ஜாக்ரத்தில் ஸ்தூலமாயும் சொப்பனத்தில் சூட்சுமமாயும் நான் எனது எனதனதல்லாதவைகளை தனதாக பந்தப்படுத்தி பஞ்சகோசங்களால் மறைக்கப்பட்டு நிலையற்று

மாறிவரும் ராஜஸ தாமஸ குணங்களால் பிணிகள் விகாரங்களை அனுபவிக்க, ஸாத்வீக குணத்தால் அந்தக்கரணங்கள் வாயுக்கள் சுத்திபட தியானம், சமாதியால் மெய்யுணர விவேகம் வைராக்கியத்தால் முக்தியென்றவரோ.

37 அபிமானம் வரும்வகையு மாங்கதனைத்
தீர்வகையுந்
தபியாம னானறியத் தயவாக கூறுமென

பதவுரை: அபிமானம் — தேகாதிகளில் பற்றுவடிவ பந்தம்

கருத்துரை: தேகாதிகளில் பற்றுவடிவ பந்தம் அகங்கார அபிமானம் வரும்வகையும் உண்டாக்கும் தன்மையும் அகங்காரம் தோன்றாமல் தீர்க்கும் வகையும், எப்படி ஆன்மாவை அடைவது என்பதை துக்கப்படாமல் அடியேன் தெரிந்து கொள்ள தயவு செய்து நானறியக் கூறுமென.

38 மறந்திடுமஞ் ஞஞானத்தான் மாநம்வந்த தஞ்ஞாந
மிறந்துவிடின் மானமும்போ மென்னவுரை
செய்தவரோ

பதவுரை: மாநம் வந்தது - தேகாதிகளில் நான் என்றும் அபிமானம் வந்தது, மாநமும் — அந்த நான் என்னும் அபிமானமும்.

கருத்துரை: மூலப்பிரகிருதி தாமஸ குணத்தின் ஆவரண சக்தியின் கோசங்களும், தந்மாத்திரைகளும் அகங்கார, நான் எனது எனும் அபிமானமும் விக்ஷேப சக்தியின் பஞ்ச பூதங்களும் கர்ம ஞான இந்திரியங்களும் அற்பக் கருவாய் கடவுள் உணர்வை மறைக்க, ராஜஸ குணத்தின் அவித்தையின் அநேக ரூபமாய் ஜீவ காரண சரீரமாய் சிதாபாஸன் பிரதிபலிப்பில் மூடப்பட்ட ஜீவாத்மா பகிர்முகமாய் பிரபஞ்ச ஜாலத்தில் லயித்திருக்க, சத்துவ குணத்தின் மாயையின் வித்தையால் அநேக ரூபமாய் ஈசுர காரண சரீரம் சைதன்யம் பஞ்சகிருத்தியங்களை பஞ்ச மூர்த்திகளால் யாண்டும் நடாத்தி






வருவதை உள்முகமாய் ஞானிகள் அந்தர்யாமியாய் உணர அஞ்ஞானம் போம். அறியாமை ஞானத்தால் கெட்டால் நான் எனது என்று உண்டாகும் தேகாதி அபிமானம் விலகிப்போம், நான் எனது எனும் அகங்காரத்தை நீக்கி நிஷ்காம்யமாய் செயலாற்ற வேண்டும்.

39 அந்தமுறை யஞ்ஞாந மணுகுவதும்
போவதுவுஞ்
சந்தயமி லாதறியத் தயவாகக் கூறுமென

பதவுரை: சந்தயம் — சந்தேகம்.

கருத்துரை: அந்தக்கிரமமாக அஞ்ஞான ஜீவனை அணுகுவதும் விலகிப்போவதும் (வந்து சேருவதும் நீங்குவதும்) எந்த முறையாக என்னும் என் சந்தேகங்களை நான் தெரிந்துகொள்ள தயவு செய்து எனக்குப் புரியும்படியாக அறிவுறுத்த வேண்டுகிறேன்.

40 அஞ்ஞாநம் வந்ததநாதியது சொல்வதல்ல
மெய்ஞ்ஞானத் தாலேவி டுமென்று
ரைத்தவரோ

பதவுரை: சொல்வதல்ல — எப்படி வந்ததென்று சொல்லக் கூடியது அன்று.

கருத்துரை: பரமாத்மா ஜீவாத்மாவைப் போல அவித்தை எனப்படும் அஞ்ஞானமும் அநாதியானது உற்பத்தியற்றது அந்த அறியாமை உற்பத்தி ஆனதும் ஆத்மாவை வந்து பொருந்தியதும் ஒருவராலும் சொல்ல முடியாது. காலம், இடம், தூரம் வேகத்திற்குட் பட்டதல்ல. சிரவண மனத்தால் மட்டும் கேட்கப்பட்டு படிக்கப் பட்டு அறியக்கூடியதல்ல. பிரபஞ்சம் எங்கும் எப்போதும் வியாபித் திருப்பது முக்குணரூபமாய் இயற்கையாய் மாறி மாறி வந்து இருந்து போய்க்கொண்டிருப்பது அஞ்ஞானத்தை நீக்க விவேகம் வைராக்கியத்தால் அஷ்டாங்க யோகத்தால் மெய்ஞ்ஞான மடைந்து உள்முகமாய் தனக்குத்தானே தியானம் சமாதியில் ஆத்மாவை ஞானத்தால் உணருவதின் மூலம் மட்டுமே (அறியாமை நீங்கிப்போம்) விலக்க முடியுமென்று உரைத்தவரோ.

41 இரவியதி ரடுத்துவந்த விருட்போல
விஞ்ஞானம்
வரவிதியோ சோதிதன்பால் வந்தவகை
யேதெனவே

பதவுரை : வரவிதியோ — வருதல் முறையல்ல.

கருத்துரை : ஞானஜோதி பரஞ்ஜோதியாய் இருக்க அஞ்ஞானம் எப்படி வந்தது சூரியன் முன்னால் நெருங்கி வந்த இருட்டைப்போல ஜோதிவடிவ ஆத்மாவின் இடத்தில் அஞ்ஞான இருட்டு வரலாமா? ஆத்மாவின் கண் அஞ்ஞானம் சேர்ந்த தன்மை எவ்வாறு? என வினவ.

42 அந்தவறி வுவந்தா லஞ்ஞான மில்லையப்பாற்
சந்ததமு மானந்த சாகரங்கா ணென்றவரோ

பதவுரை : சந்ததமு மாநந்த சாகரம் — சதாகாலமும் ஆனந்தக்கடல்.

கருத்துரை : எல்லாவற்றையும் கடந்தும் நிறைந்தும் தாங்கும் எப்போதும் தானாகவே காணப்படும் சர்வசாஷி பரப்பிரம்மம் என்ற அறிவு வந்தால் விவேகம் திடமாக வந்துவிடுமாயின் அஞ்ஞானமில்லை. அஞ்ஞானம் ஒழிந்து பட்டுப்போகும். அதன்பிறகு சதா காலமும் சாந்தியும் ஆனந்தக்கடலும் ஆனந்த சமுத்திரமாகவே இப்பாய் ஆம் என்றவரோ.

43 வேதாந்தத் தாற்குருவான் மெய்ஞ்ஞானம்
வந்தவுடன்
தீதான துக்கசுகந் தீராத ரேதெனவே

பதவுரை : குருவான் — ஞானசாரியானால், தீதான — கொடியதான.

கருத்துரை : வேதாந்தக் கருத்துக்களை கற்று வாசித்து அறிதலாலும், குருமுகமாக பலப்படி கேட்டதாலும் மெய்ஞ்ஞானம் வந்தவுடன் பிறகும் கொடியதான அஞ்ஞானத்தினால் வரும் துக்க சுகம் தீராதது. நீங்காதது என்ன காரணம் என வினவ.



44 பற்றுமோ துக்கசுகம் பரோட்சஞா னத்தாலே
யற்றமா மவ்விரண்டு மபநோட்சத்
தென்றவரோ

பதவுரை : பரோட்சஞானம் — சாஸ்திரத்தால் உண்டாகும் தத்துவ ஞானம் ; அபரோட்சஞானம — விசார ஞானமுதிர்ச்சியால் நான் பிரம்மம் என்னும் ஞானம்.

கருத்துரை : குருசாஸ்திரத்தாலுண்டாகிய வேதாந்தக் கருத்துக்களை படிப்பதாலும் கேட்டதாலும் கிடைக்கக்கூடிய பகிர்முக மற்றவரால் உணர்த்தப்படும் ஞானத்தாலோ ஆசை முதலிய பற்றுக்களை அறுந்து போகாது, ஆனால் இன்பம் துன்பம் முதலிய யாவும் அந்தர்முக தனக்குத்தானே உண்டும் தன்னுள் ஞானத்தால் அந்த சுக துக்க அபிமானங்கள் இரண்டும் அறுந்துப் பட்டுப்போகும் என்றவரோ.

45 பரோட்சமப ரோட்சமெது பகுத்துரைக்க
வேண்டுமென்றன்
திரோதமாம் புத்தி நன்றாத் தெளியும்ப
டிக்கெனவே

பதவுரை : என்றன்திரோதமாம் — எனது மறைப்புடையதாகிய.

கருத்துரை : பநோட்சம் அபநோட்சம் இவ்றிற்கிடையே உள்ள பாகுபாட்டை இலக்கணம் யாது? பஞ்சகோசங்களால் பலப்படியாக மறைப்புடையதாகிய அஞ்ஞானத்தால் திரையிடப்பட்டிருக்கும் புத்தியானது ஆத்மாவை தெளிவாக உணரும்படியாக அடியேனது மறைப்புவடிவ புத்திக்கு உள்ளவாறு விளக்கும்படி பிரித்துக் கூற வேண்டவே.

46 பகர்ந்தசத்த ஞானம்ப நோட்சம நுபவத்தா
லகம்பிரம மெனுஞான மபநோட்ச
மென்றவரோ

பதவுரை : சத்தஞானம் — சப்தருப சாஸ்திரத்தினால் உண்டான அறிவு அநுபவத்தால் — விசாரதியான அப்பியாச முதிர்ச்சியால்.

கருத்துரை : சத்சங்கங்களிலும் குருமுகமாகவும் நமக்குக் கூறப்பட்டு கேட்கப்பட்ட ஆத்மீகக் கருத்துக்கள் பரோட்சமாகும். அதற்குமேல் விடாமல் தியானம் சமாதிகளில் தன் விவேக வைராக்கியத்தால் பகுத்துப் பகுத்து சந்தேகங்களை நிவர்த்தித்து தான் யார்? பிரம்மமே நான் என தனக்குத்தானே பகுத்தறிந்து தன் உள் உணருவது விவேக சமாதி அப்யாஸ வடிவ சுவாநுபூதியால் பாலில் கலந்த ஜலம்போல மனம் தன்வடிவப் பிரம்மத்தில் ரகரசமான அநுபூதியில் நான் பிரம்மம் என்று உண்டான சாட்சாத்கார ஞானம் அபரோட்ச ஞானம் என்றவரோ.

47 தான்பிரம் மென்றறிந்துந் தநுவைத்தா
னென்றபுத்தி
யேன்போக வில்லையகை யெனக்கறியப்
புகலுமென

பதவுரை : தநுவைத்தானென்ற — ஸ்தூல உடம்பைத் தனது வடிவம் என்கிற.

கருத்துரை : தான் பிரமமென படித்து கேட்டு அறிந்த பின்னும், தனது ஸ்தூல உடம்பையே தனது வடிவம் என்ற புத்தி சரீரத்தை நான் என்னும் அபிமானம் என்ற காரணத்தால் ஏன் போகவில்லை அதை அடியேனுக்கு அறியக் கூறுமென வினவ.

48 கேள்வியினான் மநநத்தார் கிளர்ந்தயோ
கங்களின
லாள்பிரமத் தநுபவம்வந் ததுதீரு
மென்றவரோ

பதவுரை : மநநத்தாற் — சிவேகர அபேத சாதகமும் பேத பாதகமுமான அத்வைத பிரம்மத்தைத் தொடர்ந்து சிந்திப்பது ஆள் — சந்தேக விபரீதமின்றிய.

கருத்துரை : ஆத்மீகக் கருத்துக்களை குருமுகமாக மனம் செலுத்திக் கேட்டு ஜபம்வேறு ஆத்மாவேறு என்ற துவைதபேக புத்தியால் வரும் பாதகமும் இவற்றை உணர்வதால் உண்டான சிறந்த ஞானயோகங்களினால் ஆத்மாநுபவம் சிந்தித்து யுக்தியோடு செய்யும் விசாரத்தாலும் விளங்குகின்ற சவிகல்ப நிருவிகல்ப சமாதிரூப நிரோத அப்யாசத்தாலும் சர்வத்திர அதிஸ்டான வடிவ சந்தேக



விபரிதமின்றிய பிரம்மத்தினனுபவம் வந்து பின் தேகத்தில் நான் என்னும் மயக்கம் நீங்கும் தீருமென்றவரோ.

49 ஆதியாங் சிற்சொருப மாகாத தானினிமேற்
சோதிமங் ஙாதியினாற் சொருபமா
மோவெனவே

பதவுரை : சிற்சொருபம் — அறிவுருபப் பிரம்மம், சோதிமந்நாதி — சோதிக்கும் மனை நிதித்தியாசன விசாரம் முதலியவைகளால்.

கருத்துரை : அனாதியான வேதங்களை கற்று கேட்டு தெளிந்த அறிவு சொருபத்தால் அடைய முடியாததான பரஞ்ஜோதி சோதிக்கப்படும் மனை நிதித்தியாசன விசாரம் முதலியவைகளால் எப்படி பிரம்ம சொருபமாகும் முன்னமே சித்வடிவம் ஆகாத தான் இனிமேல் நல்லவை கேட்டல் சிந்தித்தல் தெளிதல் முதலியவைகளால் சித்தேகரச ஆத்ம சொருபம் ஆவேனோ என வினவ.

50 எப்போதுஞ் சிந்மயந்தா னென்மறந்து
தேடுவது
செப்புமிடற் றணியிருக்கத் தேடுதல்போ
லெனன்றவரோ

பதவுரை : சிந்மயந்தான் — அறிவுவடிவம் தான், மிடற்றணி — கழுத்தில் உள்ள ஆபரணம்.

கருத்துரை : எப்போதும் அறிவுமயமாய் நான் விளங்குகின்றேன் என்பதை மறந்து அவிவேகத்தால் மறதி உற்று குருசாஸ்திராதி சாதனங்களால் ஆராய்வது அறிவை, அங்குமிங்கும் தேடியலைவது தன் கழுத்திலேயே இருக்கும் அட்டிகையை மறந்து காணவில்லையென்று அங்கும் இங்கும் பலப்படி தேடி பின் புதிதாக கண்டாற்போல் கூறுவது போலாகும்.

51 தேடியபின் றேகபுத்தி தீர்ந்துபோய்ச்
சிற்சொரூபங்
கூடுவனோ யானென் குறைதீரச்
சொல்லுமென

பதவுரை : தேகபுத்தி - தேகமே ஆத்மா என நிச்சயமாய் எண்ணும் புத்தி சிற்சொரூபங் — சேதனப்பிரம்ம சொரூபத்தினை.

கருத்துரை : ஆத்ம விசாரணைக்குப்பின், தனது தேகமே தனது ஆத்மாவுமாம் என நிச்சயிக்கும் ஜடமாகிய புத்தி, மனம், பின்னுக்குப் போய் மறைந்து, தேகத்தின் கண் நான் என்னும் மயக்கம் விலகி, அறிவேயாகிய சொரூபமே யானென்னும், புத்தி விடுமோ என் சந்தேகம் தீர கூறுமென.

52 வந்தவுடல் வேறாயும் வாசனையாற்
றானெனலாற்
சந்தயமென் றற்சொரூபந் தானாதற்
கென்றவரோ

பதவுரை : வாசனையாற்றானென — சன்மாந்திர சமஸ்காரத்தினால்தான் சொரூபமாய ஆன்மா, சந்தயம் — சந்தேகம்.

கருத்துரை : பிராரப்த வினை அனுபவித்து முடிய எடுத்த உடல், வேறாக விசாரித்தறியவும். சஞ்சித கர்ம வாசனையால், நான் எனது எனும் அகங்காரம் விடுபடாதிருக்க அச்சொரூபம் கூடாது. தனது உண்மை வடிவ, ஆத்மாவாகிய தான் தான் என விளங்குவதற்கு, சந்தேகம் என்ன என்றவரோ.

53 தநுவைத்தா னெனும்பிரமை சத்தஞா
நத்திலறோ
தநுபவமெய்ஞ் ஞானத்தால் அறும்வகையே
துரையுமென

பதவுரை : தநுவை—தூல சரீரத்தை; சத்தஞானத்திலிருந்து பரோட்ச ஞானத்தால் நீங்காது.



கருத்துரை : பல கோடி அணுக்களாகிய இவ்வுடலை, நான் எனும் பிரமை மயக்கம் கேள்வி மனன ஞானத்தினாலறுபடாது, ஆத்மீக அனுபவ மெய்ஞ்ஞானத்தால் அகங்காறும், அறும் நீங்கும் வகை சொல்லி அருளும்மென.

54 விளக்குவிளக் கெனுமதனால் வெய்யவிருள்
போய்விடுமோ
துளக்கமிலா விளக்கேற்றிற் றொலையுமிரு
ளென்றவரோ

பதவுரை : விளக்கெனுமதனால் வெளிச்சம் என்று கூறுவதனால், வெய்யவிருள் — கொடிய இருட்டு, துளக்கமிலா — சலனம் இல்லாத.

கருத்துரை : குடவிளக்கு, மடவிளக்கு என பலவகையாய் கற்று கேட்டு அறிந்தாலும் அவித்தையாகிய காரிருள் நீங்காது. தடையேதுமில்லாத பரஞான விளக்கேற்ற மரணபயம் அகலும். வாயால் பிரம்ம, பிரம்மம் என்றால் அஞ்ஞானமும் தேக அபிமானமும் விலகாது, சாதனங்களோடு கூடிய அடங்கிய சத்துவ மனத்தால் சாட்சாத்கார அநுபவம் வந்தால், அஞ்ஞானமும், அதன் காரியமான அபிமானமும் போகும் என்றவரோ.

55 நெடுங்கால மாந்மாவை நீங்காத வஞ்ஞாநம்
விடுங்கால மெந்நாளோ மெஞ்ஞாநந்
தாலெனவே

பதவுரை : நீங்காதவஞ்ஞானம் — நிவர்த்தியாகாத அறியாமை.

கருத்துரை : நெடுங்காலமாய் ஆந்மாவை விட்டு அகலாத அஞ்ஞாநம், மெய்ஞ்ஞானத்தால் எப்போது எப்படி விட்டகலும் எவ்வளவு காலம் சொல்லுமோ என்று என வினவ.

56 அந்தகா ரங்குகையி லாயிரநா ளிருந்தாலுஞ்
செந்தீபங் கண்டவுடன் றீர்வதுபோ
லென்றவரோ

பதவுரை : அந்தகாரங்குகை — இருட்டாய் உள்ள குகை, செந்தீபம் — சிறந்த விளக்கு.

கருத்துரை : ஆயிரக்கணக்கான நாட்களாய் வருஷங்களாய், இருள் சூழப்பட்ட குகையாலும், சிறந்த விளக்கு ஏற்றப்பட்டவுடன் இருள் விலகி வெளிச்சம் பரவி விளங்குவது போல் மலம், மதம், மாயை ஸ்பரிசங்களாகிய இருள், பல நாட்கள் ஜன்மங்களாய் இருந்தாலும், அநுபவ அறிவாகிய ஞானச்சுடர் தோன்றியவுடனே அஞ்ஞானம் விலகும் என்றவரோ.

57 கருமயோ கந்தவமே காரணமா நீங்காம
லருமையா ஞானம்வந்தோ வஞ்ஞானம்
போமெனவே

பதவுரை : காரணமா — ஏதுவாகக் கொண்டு.

கருத்துரை : பலவிதமாகக் கூறப்படும் கருமங்களாலும், யாகயக்ஞாதிகளாலும், யோகமார்க்கங்களாலும், கடும் தவத்தாலும், நீங்காத அஞ்ஞானம். துர்லபமான தத்துவ ஞானம், ஆத்மீக ஞானம், வந்தவுடனா, அந்த அஞ்ஞானம் போமோ என வினவ,

58 குத்துவெட்டும் படைகளினாற் கூடுமோ
வீருடுறக்க
வுத்தமமாம் ரவியுதிர்தா லோடுமிரு
ளேன்றவரோ

பதவுரை : குத்துவெட்டும் — குத்துவதும், வெட்டுவதுமான படைகளினாற் — ஆயுதங்களினால்.

கருத்துரை : கொலை செய்யும் தன்மையுள்ள, அஸ்திர சஸ்திர ஆயுதங்களினால், இருள் நீங்கவுதவுமா என வினவ, மேன்மை பொருந்திய சூரியன் உதித்தால் மேற்படி இருள் போகும். அதுபோல் கருமத்தால் அஞ்ஞானம் விலகாது. ஞானத்தால் தான் அஞ்ஞானம் விலகும், என்றவரோ.



59 அஞ்ஞாத விடுரக்க வறியாத நல்லகன்ம
மெய்ஞ்ஞாந் தனைபரிக்கும் விதமெவவாறென
வினவ

பதவுரை : விருடுரக்க — இருட்டை நிவர்த்திக்க.

கருத்துரை : அஞ்ஞாந இருள் நீக்கவறியாத, புண்ணிய, சுபமான நித்தியாதி கர்மங்கள் மெய்யாக விளங்கும், இந்த உலகத்தை உண்மை போல காணப்படும் இப்பிரபஞ்சத்தினை, இரட்சிக்கும் தன்மை காப்பாற்றும் விதமெவ்வாறென வினவ.

60 இந்திரம் ஜாலம்போல விவ்வுலகை
நம்மிடத்திற்
நந்திரமாத் தோற்றுவித்தோஞ் சத்யமல
வென்றவரோ

பதவுரை : இந்திரஜாலம் — பொய்யாக வித்தை காட்டுவது. சத்யமல — உண்மையன்று.

கருத்துரை : உடல் பொருள் ஆவி என ஜாக்கிரத்தில் காணும் வெளிப் பொருள்கள். இந்திர மாயாஜாலம், வித்தைக்காரனால் காட்டப்படும் பொய் வித்தையைப் போல், இந்த பொய் பிரபஞ்சத்தை அதிஷ்டான ஆத்மாவில், மாயா சக்தியின் வசத்தால் பொய்யாய் தோற்றமாத்திரமாய் உண்டாக்கி இருக்கிறோம். இந்திர மாயாஜாலம் உண்மையைப் போல் தோன்றுகிறது. ஆனால் இவை தந்திரத்தால் தோற்றுவிக்கப்பட்டவையே அல்லாது, உண்மைப் பொருள் அல்ல, இந்த பொய்ப் பிரபஞ்சத்தை, பொய்க் கருமங்கள், தோற்றுவிக்கக் காரணமாகலாம். அசாத்தியம் ஒன்றுமில்லை வென்றவரோ.

61 மித்தையெனுஞ் சகத்துநின்பால் விலங்குமோ
வெனவினவ
சுத்திதனி லேரஜதந் தோன்தல்போ
லென்றவரோ

பதவுரை : மித்தை சகத் — பொய்யான உலகம், சுத்தி தனிலேரஜதந் — கிளிஞ்சலிடம் வெள்ளி.

கருத்துரை : பூமண்டலத்தில் காணப்படும் பொருள்கள் யாவும் பொய்யானது, எனக்கூறினான். எப்படி ஒப்புவது பொய் யாகிய பிரபஞ்சம், தேவரீரிடத்தில் நிகழக்கூடுமோ? என விளக் கிக் கூறுமென வினவ. கிளிஞ்சலிடத்திலே வெள்ளி இருப்பது போல் கண்ணுக்குப் புலப்படுகிறதோ. ஆனால் உண்மையில் வெள்ளியில்லையோ, கிளிஞ்சலிலிருந்து வெள்ளி எடுக்க முடி யாதோ, அப்படி பொய்யான வெள்ளியைப் போன்றது, நித்தியமான என்னிதத்தில் பொய்யாகிய பிரபஞ்சம் அநேகம் தோன்றலாம் என்றவரோ.

62 அயல்வெள்ளி சுத்தியில்மே லாரோபி தங்கூடு
மியலுன்ள சகமுமுன்வே றிருந்தது
முன்டோவெனவே

பதவுரை : அயல்வெள்ளி — அன்னியமான உண்மை வெள்ளி, ஆரோ பிதங்கூடும் ஒன்றை மற்றொன்றாகச் சொல்லுதல் பொருந்தும், இயலுள்ள சகமும் — இயல்பாக உள்ள உலகமும்.

கருத்துரை : அசலான வெள்ளியைக் கண்டு, அநுபவத்தி னுக்கு கிளிஞ்சலின்மேல் ஏற்றப்பட்டு அதில் இருப்பது போல் தோன்றக் கூடும். பொய் வெள்ளியைப் பார்க்கக் கூடும். அதுபோல சத்தியமான பிரபஞ்சமும், முன்னே இதற்கு வேறாக இருந்து அனுப வித்தது உண்டா? உண்டானாலல்லவா அதன் அநுபவத்தால் இந்த பொய் பிரபஞ்சம் தோன்றலாம். மாயம் என்னும் பூமண்டல மும், அதற்கு முன்னே வேறே தன்மேல் தோன்றியது என வினவ.

63 மநமயக்கம் பிடிக்கிலில்லா வத்துவுந்
தோன்றிடுமதுவோ
கநவில் விண்ணிற் றான்பறக்கக் கண்டதுபோ
லென்றவரோ

பதவுரை : வத்துவுந் — மூன்று காலத்தும் ஒருபடியாக இல்லாத பொருளும், கநவில் விண்ணிற் — சொப்பன காலத்தில் நமக்குத் தோன்றும் ஆகாயத்தில்.



கருத்துரை: திரையில் சினிமா ஓடிக்கொண்டிருக்கும் போது காணப்படும் குத்து, வெட்டு, ரணம், அழுகை, வெறுப்பு, வீராப்பு, முதலிய அனைத்தும் வெளிச்சம் போட்டபின் எப்படி இல்லையோ, இருட்டில் சற்று தூரத்தில் கிடக்கும் கயிறு எப்படி பயத்தில் பாம்பா கத் தெரிகிறதோ, கானல் நீரும், வானவில்லும் ஆகாயத்தில் உண் மையாக இல்லாவிடினும், மயக்கமுடைய நமது கண்ணுக்கு இருப் பதுபோல் தோன்றுவதுபோல், சொப்பன காலத்தில் நமக்குத் தோன்றும். ஆகாயத்தில் நாம் பறப்பது போன்ற தோற்றமும். இன் னும் பலவித துக்க சுகவுணர்வுகளும், எப்படி உண்மை அல்லவோ, அப்படி முன் உண்மை பிரபஞ்ச அநுபவம் இல்லாத மனிதனுக்கு முன் இல்லாத இந்தப் பொய் பிரபஞ்சத்தை பார்க்கலாம். பிரபஞ்ச மும் விசாரித்தறியில் பொய்யாகு மென்றவரோ.

64 கநவுபோற்ப்ர பஞ்சமென்றீர் கண்விழித்தாற்
கனவுபொய்யாம்
வினவுசகந் திநமுமெய்யா விளங்குவதென்
சொல்லுமென

பதவுரை : வினவுசகம் — சொல்லப்பட்ட இப்பிரபஞ்சம்.

கருத்துரை : நனவில் இவ்வுலகில் காணப்பட்ட சில பல துக்கசுகங்கள் கனவில் பிரபஞ்சம் தோன்றி சில பல துக்க சுகங்கள் உண்மைபோல் தோன்றினாலும் கண் விழித்தவுடன் அவையாவும் பொய்த்தோற்றம் ஆவதுபோல் என்றீர், ஆயினும் இவ்வுலகில் தின மும் பார்த்து, கேட்டு, முகர்ந்து, ருசித்து, தொட்டுணர்ந்து, அனுப விப்பது, சத்தியம்போல மெய்யானதுவாய் விளங்குவது ஏன் எத னால் கூறுவீர்.

65 மெய்யாக விளங்குவது மெய்ஞ்ஞாநம்
வருமளவும்
பொய்யாம்பின் கநவதுபோற் போதம்
வரிலென்றவரோ

பதவுரை : போதம்வரில் — திடமாக தத்துவஞானம், பரமா நந்தம் கூடிவருமாயின்.

கருத்துரை : இம்மாயாஉலகம், உண்மைபோல் தோன்றுவது நாம் அஞ்ஞானத்தில் மூழ்கியுள்ளவரைக்குந்தான் 96, 36, 25 என ஆசாரியர்களால் விளக்கிக் கூறப்படுத தத்துவ விளக்கங்களும் அதற்குமேல் தனக்குத்தானே, தியானம், சமாதியில் விவேக வைராக்கியத்தால் மெய்ஞ்ஞானம் வந்தவுடன், சர்வதுக்க நிவர்த்தி பரமானந்தம் பிராப்தியடைந்தவுடன் கனவில் கண்டவை பொய்யாவது போல், இப்பிரபஞ்ச வாழ்வும் பொய்யென தெளிபடும்.

66 முன்பு கண்ட கநவுபொய்யா முழிசாக்ரம்
போலவென்றீர்
பின்பு முத்தித் தசையடைந்தும்
ப்ரபஞ்சநிற்ப தேதெனவே

பிறப்பு
இறப்பைச்செய்யாதிருந்தும் தோற்றுவது என

பதவுரை : முழிசாக்ரம் — தூக்கத்திலிருநது விழித்தபின் தோன்றும் ஜாக்ராவத்தை முத்தித் தசையடைந்தும் — மோட்ச நிலையடைந்தும்.

கருத்துரை : முன் இரவு சொப்பனத்தில் கண்டயாவும் கண் விழித்து நனவுக்கு வந்தவுடன் பொய்ப்பொருளென உணரப்படுவது போல் என்றீர், அப்படி இருக்க மெய்ஞ்ஞான உணர்வடைந்த பின்னும் ஞானிகளும் பிரபஞ்சம் விவகாரத்தோடு உலகில் மற்றவர்கள் போல் ஊண், உறக்க, உடை, இடம் என நிற்பதென யாது காரணம் என வினவ.

67 தெரிந்தவர்க்குத் தோற்றுவது தெத்தபடம்
போல்வதல்லாற்
பரந்தசகங் காரியத்திற் பயன்படா
தென்றவரோ

பதவுரை : தெத்தபடம் — நெருப்பினால் சுடப்பட்ட வஸ்திரம், தோற்றுவது — விளங்குவது, காரியத்தில் — பிறப்பு, இறப்புகளைச் செய்யும் காரியத்தில்.

கருத்துரை : பாம்பு தன்மேல் தோல் உரித்துவிடப்பட்ட பின்னும் எப்பவும்போல் வாழ்வதுபோல் வெந்து சாம்பலான வேஷ்டி



போலக் காணப்பட்டாலும், இடுப்பில் கட்டிக்கொள்ளுதல், முதலிய காரியத்தில் பயன்படாததுபோல், விரிந்த இந்த பிரபஞ்சம் ஜீவன் முத்தரின் மறுபிறப்பு முதலிய விவகாரத்திற்கு யாதொரு பலனையும் கொடுக்காது, பிரபஞ்சம், பிராப்தம் கழிகிற பரியந்தம் இருந்து நீங்குமே ஒழிய, மறுபிறவி முதலிய, அனர்த்தத்தை விளைவிக்காது. மெய்யுணர்ந்த ஞானிகளும், உடல்பொருள்கள் தனதல்ல மாயை என ப்ராரப்த வசத்தால் தனக்கு விதிக்கப்பட்ட கர்மங்களை செயலிலும், பலனிலும், பற்றற்று வினைமுடிய வாழ்வர், என்றவரோ.

68 கன்மவினை யஞ்ஞாநங் கடந்துமதன்
காரியமாம்
புன்மையுறு மெய்யுடனே போகாத
தேதெனவே

பதவுரை : புன்மையுறுமெய் — இழிவு பொருந்திய சரீரம்.

கருத்துரை : கர்மவினைப்பயன் அக்ஞ்ஞானத்தைப் போக்கிக்கொண்ட மெய்யுணர்ந்தோருக்கும், வாழ்வின் மலங்கள், ரோகங்கள், உயிருடன் இருக்கும் வரைக்கும் போகாததேதெனவே, கர்மம், காமம், அஞ்ஞானம் மூலங்களும் ஞானத்தால், காம கர்மங்களின் காரியமான அற்பத்தன்மையுடைய உடம்பு உடனே நீங்கிப் போகாதது என்ன காரணம்? என்று வினவ.

69 வெட்டவிழு மரம்பசந்து விளங்குதல்
நட்டகன்ம மாய்ந்துமங்க நடித்திடுங்கா
ணென்றவரோ

பதவுரை : பசந்து — பசுமையாக, நட்டகண்மம் – சஞ்சித கன்மம், அங்கநடித்திடும் — தேகம் சஞ்சரிக்கும்.

கருத்துரை : வளர்ந்த மரம் கிளைகள் வெட்ட பின்னும் மறுபடியும் கிளைகள் தோன்றி சில காலம் தொடர்ந்திருத்தல் போல் வேரோடு, வெட்டித்தள்ளிய விருட்சம், கொஞ்ச நாள் பச்சையாய் இருந்து, பின் காய்வதுபோல் அஞ்ஞானத்தோடு சஞ்சித கர்மம், ஞானத்தால் கெட்டும், அதன் காரியமான உடம்பு, கொஞ்சகாலம் பிராரப்தம் உள்ளவரை ஜீவித்திருக்கும். மெய்யுணர்ந்தோர்க்கும் கர்ம வினைப்பயன் மாய்ந்த இன்னும் விதிக்கப்பட்ட நாள்வரை

மற்றவர் திருப்திக்காக (மகிழ்வுக்காக) உலக நல்வழக்காக நடிப்பர் என்றவரோ.

70 சென்மம் போய் முத்தியினைச் சேரச்சி
லரிருக்கத்
தொன்மையாந் மாபலவோ சொரூபம்
பகருமென

பதவுரை : தொன்மையர்நமா — அனாதியாய் இருக்கின்ற ஆத்மா.

கருத்துரை : பலகோடி மனிதரில் ஒரு சிலர் ஞானம் அடைந்து ஜீவ முக்தியினைச் சேர வாமதேவர் மனிதரின் ஆன்மாக் கள் பல அஞ்ஞானிகளாகிய ஜீவர்கள், இப்போதும் மோட்சம் அடையாமல் பந்தத்துடன் காணப்படுவதால் அநாதியான ஆத்மாக் கள் அநேகமோ? ஆன்மாவின் உண்மை வடிவத்தை பலவோ என் பதை ஞானச் சொருபமாயிருக்கும் ஆசாரியர் விளக்கிக் கூற வேண் டுமென வினவ.

71 பிரமனென்று மீசனென்றும் பெருகுபல
சீவரென்று
முறைமயக்க மலதாங்மா வொருவனே
யென்றவரோ

பதவுரை : ஈசனென்றும் — காரணப் பிரம்மாகிய ஈசுவரன் என்றும் மயக்கமலது — பிராந்தியே அல்லாமல்.

கருத்துரை : சுத்தப்பிரம்மமென்றும், மாயையோடு கூடிய ஈசுவரன் முக்கிய தேவர்கள், தேவதைகள் இன்னும் ஜீவாத்மாக்கள் பலப்பலவென்று அவித்யா அஞ்ஞானத்தில் மயக்கமுற்று உரைக்கப் படுகிறதெனினும் அகண்ட ஏகரச ஆத்மா எனப்படும் பிரம்மம் ஒன்றேதான் இரண்டு அல்லது பல இல்லவே இல்லை என்றவரோ.

72 ஏகந்தா னாத்மா வெனும்வகையே
மெய்யானா
லாகந்தோ றும்பலவா யமர்ந்தென்னோ
சொல்லுமென



பதவுரை : ஆகந்தோறும் — உடம்புகள்தோறும்.

கருத்துரை : ஆன்மா ஒன்றேயாகும் என்னும் கூற்று தன்மையே உண்மையானால் பலவித ஏற்றத்தாழ்வுடன் ஜீவர் களில் — ஆன்மாக்கள் அமர்ந்து இருப்பது என்ன காரணத்தினால் சொல்லுமென்று வினவ.

73 பலகடத்திற் சலத்தூடு பாநுவிம்பந்
தோன்றுதல்போற்
றொலைவில் புத்தி தொறுமாங்மாத்
தோன்றுதல்கா னென்றவரோ

பதவுரை : சலத்தூடு — நீரினிடத்து, றொலைவில்புத்தி — எண்ணமுடியாத அந்தக்கரணங்கள்.

கருத்துரை : பலவித வடிவங்களில் உள்ள மண் பாத்திரங் களில் நிறப்பட்ட நீரில் ஒன்றேயாகிய சூரியன் அவ்வப்பாத்திரங் களின் வடிவத்தை அனுசரித்து அநேக பிரதிபிம்பங்கள் — தோன்றா மாத்திரமாய், தோன்றுவதுபோல், ஜீவனின் அந்தக் கர்ண புத்தித் தன்மையை அனுசரித்து, அளவில்லாத அந்தக்கரணங்கள் (மனங்கள்) ஒவ்வொன்றிலும் உபகித ஆத்மா ஒருவனே, பிரதிபிம்ப ஆபாசங்கள் அந்தக்கரனாம் ஒவ்வொன்றிலும் காணப்படும், தோன் றுவது அறிவாயாக என்றவரோ.

74 ஆதித்தன் போலாங்மா வளவில்புத்தி
தோறுந்தோன்றிற்
சாதிக்கு முக்தியெவர் தமக்கதனைச்
சாற்றுமென

பதவுரை : அளவில்புத்தி—எண்ணமுடியாத அந்தக்கரணங் கள், சாதிக்குமுக்தி—சிரவனாதிகளால் சித்தியடைந்த மோட்சம்.

கருத்துரை : பிரயத்தட்சமான ஒரே சூரியன் பலவித பாத்தி ரங்களில் பலவடிவங்களில் தோன்றுவதுபோல பலவித புத்தியானு சாரம் ஆன்மா மாறுபட்டு தோன்றுகிறதெனில் ஞானமெய்தி முக்தி யடைவது ஆத்மாவா? புத்திவடிவ அந்தக்கரணமா? அதிலுள்ள பிரதி பிம்பமா? எவர் எப்படி என்பதை விளக்கிக் கூறுவீராகவென.

75 பந்தமுத்தி தானுமந்தப் பரந்தபுத்தி
தனக்கேயா
மந்தவிம்பந் தனக்கிலையென் றறிவுவரச்
சொன்னவரோ

பதவுரை: பந்தமுத்தி — கட்டும் விடுபாடும், விம்பந் — அதிஷ்டான ஆத்மா.

கருத்துரை: சஞ்சிதம், பிராரப்தம், ஆகாம்யம், ஆகிய கர்ம வினைப்பயன்களால் பத்தப்பட்டிருக்கும் ஆபாச, சகிதபுத்தியே. பல பாத்திரங்களில் காணப்படும் சூரிய பிரதிபிம்பங்கள் தானல்ல, ஒன்றேயாக ஆகாயத்திலுள்ள, சூரிய ஜோதியேதான் எனும் அறிவு வர கட்டுப்படுதலும், விடுபடுதலும், விஷயத்தில் விழுந்து சென்று விழும்படியான, பிரதிபிம்பத்தோடு கூடிய, உள் கரணத்திற்கேதான், உதாசீன சாட்சி வடிவ சம்பந்தம் இல்லாத உபகிதமாகிய ஆத்மாவிற்கு, பந்தமும், மோக்ஷமும் ஒருக்காலும் இல்லை. விளக்கிச் சொன்னவரோ.

76 பரமேக மாயுமதிற் பலசீவ ரேதெனவே
யொருகடலிற் பலகுமிழி யுதிப்பதுபோ
லென்றவரோ

பதவுரை: பரமேகமாயும் — பிரம்மம் ஒன்றாயிருந்தும், குமிழி — நீர்க்குமிழிகள்.

கருத்துரை: பரமாத்மா ஒன்றே என்பது உண்மையாயின் பல ஜீவாத்மாக்கள், எப்படி உண்டானார்கள்? ஏது என வினவு? கடல் ஜலம் ஒன்றே எனினும், அதில் பல நீர்க்குமிழ்கள் காற்றின் வசத்தால் தோன்றித் தோன்றி அதிலேயே மறைவதுபோல, அனாதி கருமவசத்தால் ஒரே பிரம்மத்தின் மண் கற்பித ஜீவர்கள் அனேகர் தோன்றலாம் வென்றவரே.

77 சீவனது தானென்றுஞ் சேரும்பி ரமமென்று
மாவதுவோ பேரின்ப மாங்கதெனக்
கோதுமென

பதவுரை: தானென்றுஞ் — சொருபம் என்னும்.



க. உ. பலவாகக்காணும் ஜீவாத்மா பரிணாம வளர்ச்சியால், முடிவில் சேர விரும்பி அடைவது பரப்பிரம்மமே யாவதெனில், பேரின்பம் எனக்கூறப்படுவது எப்படிபட்டது. ஜீவன் எனது வடிவம் என்றும், இனி பிரம்மவடிவம் ஆவேன் எண்ணுவதோ பிரம்மானந்தம் எது எனக் கூறுமென.

78 ஏகம்பி ரமம்மி ரண்டிலைநீ வேறுமல
சோகமுறும் பேதமறிற் றோன்றுமின்ப
மென்றவரோ

பதவுரை: சோகமுறும் பேதமறிற் — துக்கம் பொருந்தற்கு ஏதுவாகிய பேதபுத்தி நீங்கிவிட்டால்.

கருத்துரை: பிரம்மம் ஒன்றேதான் உண்மையாக உள்ளது. இரண்டில்லை, பலவுமில்லை, நீயும் மற்றவை யாவையும், பிரம்மத்தின், சொருபமேயன்றி, வேறுபட்டதாக ஒன்றுமில்லை, சோகத்தை உண்டாக்கும் ஆசை, பயம், மயக்கம், நீங்கில் பரமானந்தம் ஒன்றேயாம். துன்பந்தரும், நன்றாகச் செய்யும், கேட்டல், சிந்தித்தல், தெளிதலால், ஜீவ ஈஸ்வரபேதம், ஜீவ ஜீவ பேதம், ஜீவஜடபேதம், ஜடஜடபேதம், ஜடஈஸ்வரபேதம், ஆகிய ஐந்து பேதங்களும், அடியோடு நாசமானால், பிரம்மானந்தம் தானே விளங்கும் அறிவீர் என்றவரோ.

79 ஜீவபேதம் போமோ சித்தொன்றா
மோமெனவே
யாவன்மன மறுஞ்சுபூத்தி யவத்தையிற்பா
ரென்றவரோ

பதவுரை: சித்தொன்றாமோ — அறிவுவடிவப் பிரம்மம் ஏகமாக விளங்குமோ; ஆவன்மனமறுஞ் — ஆசை பலவுடைய மனம் ஒழியும், தெளியும்.

கருத்துரை: ஜீவன்களுக்கிடையில் காணப்படும் பேதம், ஏற்றத்தாழ்வுகள் பேதப்பார்வைகள் போகுமோ? ஜீவன் சித்தத்தில் அறிவு, ரூபனான நான் ஏகனாக சர்வபேதமும் இன்றி பேறறிவு ஒன்றேயாகுமோ எனக் கேட்க, எல்லா ஜீவன்களிடத்திலும் கன

வில்லாத ஆழ்ந்த தூக்கத்தில் சுழுத்தியில், அனுபவிக்கப்படும், சாந்தியின்பம், யாவற்றிற்கும், ஒருபடித்தரமாகவே காணப்படுகின் றன. அங்கு பேதம் இல்லை. அரசன் என்றாவது, சேவகன் என்றா வது, ஆண் என்றாவது, பெண் என்றாவது, மிருக மென்றாவது, பட்சி என்றாவது யாதொரு பேதமுமில்லை. ஆதனால் நீ ஆனந்த னாகவே விளங்குகின்றனை. இது எல்லோருக்கும் பொது அநுபவம். சமாதியில் நிர்ப்புஜமாய் சகலமும் பாதிக்கப்படுவதால் நித்தியானந் தம்தானே விளங்கும். வேறுபாடு சிறிதும் கிடையாது அறிவாயாக யென்றவரோ.

80 பேதமல விவ்வுலகம் பிரமமய மென்றறிந்தும்
பூதமய மாய்த்தோற்றல் போகாத தேதெனவே

பதவுரை : பூதமயமாய்த் தோற்றல் — பஞ்சபூதவடிவமாகக் காணப்படுதல்.

கருத்துரை : பலவித துன்பமயமான இல்வுலகம், பரமானந் தப், பரப்பிரம்ம மயமானது என்பதை சிரவண மனனத்தால் விளங் கியும், ஆகாயம், காற்று, தீ, நீர், பூமி என ஸ்தூலபூதமாயும், சப் தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம் என சூட்சும தன் மாத்திரை களாயும் பஞ்சீகரணத்தினாலான தோற்றம் திரும்பத் திரும்ப பலப்படி, மீண்டும், மீண்டும் பூத பௌதிக நாமரூபப் பிரபஞ்சமாகக் தோன்றியுழல்வது, போகாததேதென வினவ.

81 கானலை நீரென்றோடிக் கண்டவர்குத்
தீர்ந்த பின்னும்
வானுலவு நீராகி வயங்குதல்போ
லென்றவரோ

பதவுரை : கானலை — உஷ்ணக்கரணத்தை, தீர்ந்த பின் னும் — நீரென்னும் மயக்கம் நீங்கிய பின்னரும், வானுலவு — வெளி யில் செல்லுகின்ற.

கருத்துரை : கானலாகிய உஷ்ணக்கிரணத்தால், சற்று தூரத்தில் நீர்நிலை இருப்பதுபோன்ற, பொய்யான தோற்றத்தைக் கண்டு, தாகவிடாய் தீர்ந்துக்கொள்ள, அங்கு ஓடி அலைந்து ஏமாந்து, கானலை நீரென்னும் மயக்கம் நீங்கிய பின்னரும், ஆகா



யத்திலிருந்து பொழிந்த உண்மையான ஜலம் போல, காணப்படுதல் போல், நாமரூபம் அனைத்தும் தன்வடிவப் பிரம்ம சொரூபமென்று, ஸ்வாநுபூதியால் கண்டநுபவித்த பிறகும், பிராரப்தம் உள்ள வரை யில், இந்த பொய் பிரபஞ்சம் பொய்யாகவே காணப்படும். இதனால் யாதொரு லாப நஷ்டமில்லை என்றருளியவரோ.

82 அறிவானு நல்லறிவு மறியப்ப டும்பொருளும்
பிறிவாய்முன் றாயிருத்தல் பேதமல
வோவென

பதவுரை : நல்லறிவு — உயர்ந்தஞானம்.

கருத்துரை : காண்பான் பரமாத்மா, காணுதல் ஜீவாத்மா காணப்படும் பொருள், பிரபஞ்சப் பொருள்கள் என சிறந்த அறிவும், அறிகின்ற ஜீவனும், அறியப்படும் தோற்றப்பொருளும் பேதமாக மூன்று பிரிவாய் இருத்தல் பேதமல்லவாவென வினவ.

83 சொப்பனத்திற் றனித்தொருவன் றோற்றம்வே
றில்லையங்கே
கற்பனையாம் பொருளறிவு காண்மவன்போ
லென்றவரோ

பதவுரை : றோற்றம் – காணப்படும் திரிபுடிப் பொருள், பொருளறிவு — பொருளும் அதைப்பற்றிய அறிவும்.

கருத்துரை : சொப்பனத்தில் காணப்படும் தோற்றங்கள், சொப்பனம் காணுபவன் ஒருவனால் மட்டும்தான் காணப்படுகிறது. அந்த குறிப்பிட்ட காட்சிகள் மற்றவர் யாருக்கும் காணப்படுவ தில்லை, அப்படியே பிரபஞ்ச அறிவும் ஒவ்வொருவர் நோக்கில் அவரவர் புத்தி, காலம் நேரம் வேகம் தூரம் ஆகியவற்றால் மாறு பட்டு வெவ்வேறாம் அவரவர் மனம் புத்தி சாதுர்ய கற்பனையேயன்றி வேறில்லை. கனவில் திரிபுடிக்கு விஷயங்களான திரிசியப் பிரபஞ் சங்கள் யாதொன்றும் உண்மையில் அவ்விடத்தில் இல்லை. ஆனால் கனவு காண்பவனது மனத்தால் அப்போது கற்பிக்கப்பட்டல உகப் பொருள்களாகிய ஞேயங்கள், உலகப் பொருள்களின் ஞானம் ( அறிவு ) பார்ப்பவனாகிய ஞாதுரு (ஜீவன்) இந்தக் கற்பனாதிரி புடிகள் உண்டாவது போல இந்தக்கற்பனையாகிய ஜாக்கிரத்திலும்,

மானஸ,கற்பனாதிரிபுடிகள் அநேகம் தோன்றலாம்.இதனால் பேதம் எங்கிருந்து உண்டாகும்? சொப்பனத்திரிபுடி சொப்பனத்திற்கு வேறு இல்லாதது போல இந்த ஜாக்கிர திரிபுடியும் சாட்சிக்கு வேறு அல்ல,சகலமும் சாட்சியாகிய பிரம்மத்தில் ஆத்மாவில் கற்பிதமாகும் என்றவரோ.

84 கற்பனையாம் பேதங்கள் காணாமற் போம்
வகையே
விற்பநமா நானறிய விளம்புமென
வேவணங்க

பதவுரை : விற்பநமா — தெளிவாக.

கருத்துரை : அறிவான் அறிவு அறியப்படும் பொருள் என்னும் பேதங்கள், வெறும் கற்பனையாம் என, இதனை தெளிவாக நான் உணரும் பொருட்டு, பொய்யாகிய பேதங்கள் தோன்றாமல் நீங்கிப்போகும், தன்மையை நன்றாக அடியேன் தெரிந்துகொள்ள விளக்கிக் கூறுமென வணங்கி விண்ணப்பிக்க.

85 துரியமாம் யோகத்தாற் றூயமநம் லயமானா
லரியமூ வகைவிதற்ப மழியுமென்று
சொன்னவரோ

பதவுரை : துரியமாம் — நான்காம் பூமி.

கருத்துரை : தாரணை, தியானம், சமாதி, துரியம் எனப் படிப்படியாய் மனம் சந்தேகங்கள் தெளிந்து தூய்மையாகிய பிரம மத்தினால் லயமானால் அவஸ்தாத்திரய, அபிமானத்திரய, சரீரத் திரய விலக்ஷணனான சுத்த ஆத்மா விளங்க யோக்கியமான துரி யத்தில், நிதித்தியாசனத்தின் பரிபாக வசத்தால் உண்டாகும் நிருவி கல்ப சமாதி வடிவ அப்பியாசத்தின் முடிவில் சத்துவமனமும், பாலில் கலந்த பால் போல ஆத்மாவில் அபேதமானால், அவிவேகி களால் விடுதற்கு அரிய திரிபுடியின் தோற்றம் அழியும். நீங்கும் பரமாத்மா, ஜீவாத்மா, பிரபஞ்சம், மாயை இவை மூன்றும், வெவ் வேறல்ல. பிரம்மம் ஒன்றேதான் என அறிய, மூன்று எனும் பேதங்கள் ஒழிந்து, யாவர்க்கும் முடிவு ஒன்றே என விடை கிடைக்கும்.



86 சிறந்திருக்கு மாங்மாவுஞ் செகமெல்லா
நிறைந்திருந்து
மறைந் தெனக்குத் தோன்றாத வகையேது
சொல்லுமென

பதவுரை : மறைந்தெனக்கு — ஒளிந்து எனக்கு.

கருத்துரை : சிறப்புமிக்க சத்து சித்து ஆனந்த சிறப்போடு நான் நான் என விளங்கும் ஆத்ம சொரூபம் ஆன்மா பிரபஞ்சமெல்லாம் நிறைந்திருந்தும் என்ன காரணங்களால் ஆத்மாவை உணர முடியாது மறைவாக அடியேனுக்கு காணப்படாத தன்மை மறைந் திருக்கும் வகையேது சொல்லுமென.

87 சத்துச்சித் தாநந்தத் தாமூன்று மதனுடனே
யொத்துற்று நாமவு ருவஞ்ச கமாகி

பதவுரை : ஒத்துற்று — ஒருமித்துப் பொருந்தி.

கருத்துரை : இருப்பு, விளக்கம், ஆனந்தம், ஆகிய மூன்றும் சர்வ வியாபக சத்ரூபசக்தி, சர்வப் பிரகாச அறிவு ரூபசித்சக்தி, சர்வ ஆனந்த ரூபசக்தி என ஸ்தூல உடல், சூக்ஷ்மமனம் காரண ஆத்மாவாய், பல குறிப்புப் பெயர்கள் கொண்டவைகளாய், பல கோடி உருவ வடிவங்களாய், பற்பல பிரபஞ்ச நிலைகளாகி, பக்தி, ஞானம், வைராக்கியமாய், தமஸ், ரஜஸ் சத்துவமாய்.

88 இருக்கையினிற் றோற்றாதிவை மூன்றும்
பிரமமென
மரிக்கில் வரும் பின்னிரண்டு மறிசகமென்
றுரைத்தவரோ

பதவுரை : தோன்றாது — விளங்காது, பின்னிரண்டு — பின்னா கூறிய நாமரூபங்கள்.

கருத்துரை : நாமம், ரூபம், பிரபஞ்சம், மூன்றும் பிரம்மமே என்பது பகிற்முகமாய் நாம் பார்த்து, கேட்டு, ருசித்து, முகர்ந்து, தொட்டுணரும், இயற்கையினில் தோன்றாது. ஆனால் மனத்தை

உடல் கருவி இந்திரியங்களுக்குக் கட்டுப்படாமல் உள்முகமாய் திருப்பி ஆத்மாவை நோக்கி செலுத்துங்கால் இந்த பேத அஞ்ஞா ணங்கள் இறந்து ஒழிய நாமரூபம் இரண்டும் ஒழிந்துபோய் பிரபஞ்சம் யாவும் பிரம்மம் ஒன்றே என்பது விளங்கும். சத்து, சித்து, ஆனந் தம், மூன்றும் பிரம்மத்தின் லக்ஷணம் என்று இடைவிடாது அநு சந்தானம் (சிந்தித்தல்) செய்து வந்தால், நாமரூபம் துடைபட்டு, சத்து, சித்து, ஆனந்தவடிவ தன் சொருபம் அய்யாச மிகுதியால் அபரோக்ஷமாக விளங்கும். வாய் குவிந்து, வயிறு பெருத்து ஸ்தூலா காரமாக இருப்பது, குடத்தின் உருவம், குடம் என்பது பெயர். குடம் இருக்கிறது, குடம் விளங்குகிறது, குடம் நன்றாகயிருக்கிறது, என்ற மூன்றும் சச்சிதானந்த வடிவ பிரம்மம், இவ்வாறு சகல பதார்த்தங்களிலும், தன் தேகத்தும் யூகித்து காண்க. இவைகளில் கடம் என்னும் பெயரும் மண் வடிவ குட உருவமும் பொய். சச்சி தானந்த வடிவபிரம்மம் தானென்று விசாரித்து, பொய்யில் அனா தரவும், தன்னில் ஆதரவும் கொண்டு அனுசந்தானம் செய்யல் ஆன்மா விளங்கும் என்றுரைத்தவரோ.

89 அறிந்துகொள்ஞா னத்தாலே யாங்மாவை
யென்றுரைத்தீர்
சிறந்தோளிரு மாங்மாவுங் திருசியமா
மோவெனவே

பதவுரை : திருசியமாமோ — பார்க்கத்தக்கதாகுமோ.

கருத்துரை : ஆத்மீக மெய்ஞ்ஞானத்தாலே அபரோட்சமாக ஆன்மாவை பூரணமாய் அறிந்துகொள் என்று கூறுகிறீர், பரிபூரண தேஜோமய பரமானந்த சர்வப்பிரகாச ஆந்மாவும் பார்க்கத்தக்க தாகுமோ, உணரத்தக்க தாகுமோவென வினவ.

90 முந்தியஞா னத்தாலே முதிருமஞ்ஞா
நந்துரக்கிற
சிந்தையிலாங் மாச்சுயமாய்த் திகழுமென்று
சொன்னவரோ

பதவுரை : துரக்கிற் — நிவர்த்திக்கில்.

கருத்துரை : தாரணை, தியானம், சமாதி, துரியம், துரியா தீதம் என அபரோட்ச ஞானம் மேலோங்கி நிற்க அஞ்ஞானம்



உதிர்ந்து போய் நீங்கிவிடுமாயில் தூய்மையாக்கப்பட்ட அந்தக் கரணங்களால் இருதயத்தில் ஆந்மா ஸ்வயமாய்த் தோன்றுமென்று சொன்னவரோ.

91 இனியமுத்திச் சுகமிருப்ப தெப்படி
யென்றேவினவ
வநுபவத்தி லறிவிடயா னத்தம்போ
லென்றவரோ

பதவுரை : விடயாநத்தம் — இந்திரியங்கள் மூலம் வரும் ஆனந்தம்.

கருத்துரை : இனியதான முக்திச்சுகம் எப்படி இருக்கும் அவரவர் சொந்த அனுபவத்தில் கர்மேந்திரியங்கள், ஞானேந்திரி யங்கள் பகிர்முகமாய் பிரபஞ்சத்தில் உணர்ந்து அறியப்பட்ட சிறந்த விஷய சுகம்போல், நாதசுகம், உணவின்சுகம் காமசுகம் எப்படி பாமரர்களுக்கு ஆனந்தமாக தோன்றுகிறதோ? அதைவிட பலமடங்கு உயர்ந்து சிறந்ததாக மோட்ச சுகம் ஞானிகளுக்குப் பேரானந்தமாக இருக்கும் வேண்டப்பட்டது, வேண்டப்பட்டபோதே பூரணமாய்க் கிட்டும் என்றவரோ.

92 மநலயம்வங் தவரலது மற்றிலரோ
முத்தரெனச்
சநகனைப்போற் சீவங்முத்தா தாமுமுள
ரென்றவரோ

பதவுரை : மனலயம் — மன அடக்கம் அதிகம், சநகனைப் சனகராஜனைப்.

கருத்துரை : மநலயம் வாய்க்கப்பட்ட முற்றும் துறந்த சந்நி யாசிகள் அல்லது மற்ற வகையினர், மனம் அடங்கி விவகாரம் இல்லாத ஜடபரதர், சுகர் போன்றவரல்லாமல் முக்தி சுகம் கொண்ட வருண்டோ என வினவ, சனகமகாராஜனைப் போன்றவர்கள் ராஜ்ய பரிபாலனாதி விவகாரமுடைய, நிஷ்காம்ய, கர்மவாதிகள் பல சீவந்முக்தர்கள் உளர் என்றவரோ.

93 சீவன்முக்தி யடைந்தோர்கள் செயலுமவர் தங்குணமு
நாவுரைக்கும் வாசகமும் நானறியச் சொல்லுமென

பதவுரை : வாசகமும் — வசனாப்பிரகாரமும்.

கருத்துரை : சீவன் முக்தியடைந்தோர்கள் செயல் முறைகளும், குண வகையும் அவர்கள் சொல்லும் வார்த்தைகளும், தூல சரீர விவகாரமும், அவர்களது அந்தக்கரண தர்மங்களும், வாக்கு முதலிய இந்திரியங்களின் தொழிலும், அடியேன் தெரிந்துகொள்ள எப்படிப்பட்டவைகள் என்பதை நானறியச் சொல்லுமென.

94 வருங்கருவு பிறப்பினெடு வளர்தல் பருத்தல் குறைத
லொருங்கலுமெய்க் கென்றதனை யொருத் திருப்பா ரென்றவரோ

பதவுரை : யொருத்திருப்பார் — நீக்கி இருப்பார்.

கருத்துரை : தாயின் கர்ப்பத்திலிருந்த குழந்தை பிறந்தவுடன் — சூதுவாது அறியாமல் பேதகுணமற்று தானறிந்த நல்ல உண்மைகளை உரைப்பதுபோல் படிப்படியாக வளர்தல், பருதல், குறைதல், சுருங்குதல், முதலியவை பரிணாம மாறுபாடுகள் ஸ்தூல தேகத்திற்கன்றி ஆத்மாவிற்கு இல்லை என அவற்றில் விருப்பு வெறுப்பின்றி சாட்சிருபமாய் நீக்கி இருப்பர். கர்ப்பத்தில் சிசுவாக இருத்தலும், குழந்தைப்பருவம், குமாரப்பருவம் 20 வயது வரையிலும், எவ்வனப்பருவம் 40 வயது வரையிலும், நரைதிரையோடு கிழப்பருவம், பிறகு மரணமடைந்து பிணமாக மாறுதலும், பொய்யாகிய தேகத்திற்கே ஒழிய, ஆத்மாவான நித்திய வியாபக வடிவத்திற்கு, இந்த ஆறுவித விகாரங்களும் இல்லை என்று விகாரங்களால் உண்டாகும் சரீர வேதனையை பொறுத்துக்கொண்டிருப்பார்கள் என்றவரோ.

95 பார்ப்பதுவுங் கேட்பதுவும் பகர்வதுவுஞ் சொல்வதுவு
மேற்பதுவுங் கரணதன்ம மெனத்துணிவா ரென்றவரோ



பதவுரை : கரணதன்மம் — ஞானகர்ம இந்திரியங்களின் தர்மம்.

கருத்துரை : பார்ப்பதும், கேட்பதும், வசனிப்பதும், சொல்லுவதும், ஏற்பதுவும், பஞ்சபூத ஜடமாகிய மனம், புத்தி, முதலிய அந்தக்கரணத்தின், ஞானேந்திரிய, கர்மேந்திரிய தருமமன்றி ஆத்மாவை சார்வதில்லை என நிச்சய அநுபவம் முடையவர் என்றவரோ.

96 பசிதாக முயிர்க்கெனவே பயந்துக்க சுகங்காமம்
வசிகோப மதிக்கெனவே மகிழ்ந்திருப்பா ரென்றவரோ

பதவுரை : வசிகோபம் — குற்றம் பொருந்திய கோபம்.

கருத்துரை : பசிதாகம் அன்னபானங்களின் ஆசை ஜடமாகிய பஞ்சப்பிராண உயிர்த்தன்மையதாம், பயம், துக்கம், சுகம் ஆசை, குற்றம் பொருந்திய கோபம் யாவும் ஜடமாகிய மனம் புத்தி மாத்திரமாம். இவற்றில் எதுவும் ஆத்மாவை பாதிப்பதில்லை என விலகி ஆனந்த மயமாயிருப்ப ரென்றவரோ.

97 வீடுந்தா ரமுமுறவு மேவியென்று மிருந்தாலு
நீடுந்தா மறைநிலைநீர் நிகராவா ரென்றவரோ

பதவுரை : மேவியென்றும் — பொருந்தி சதாகாலமும், நிகராவர் — போல ஆவார்கள்.

கருத்துரை : வீடு, மனை, உறவு முறையார் என பலப்படி, எப்போதும் பொருந்தி இருந்தாலும் எப்படி நீண்ட தண்டுடைய தாமரை இலைமேல் உள்ள பனித்திவலை, நீர், அவ்விலையுடன் சம்மந்தப்பட்டிருக்கவில்லையோ, அப்படியே இந்த ஜன்மத்தின் உறவு முறை முந்திய ஜன்மங்களிலோ, இனி வரப்போகும் பல ஜன்மங்களிலோ ஒன்றுக்கொன்று உறவாய் இருந்ததில்லை. இருக்கப்போவதுமில்லை என்ற நிச்சயத்தில் பற்றுதலின்றி ஆனந்தமாயிருப்பர் என்றவரோ.

98 பற்றிடுங்கா யமுந்தானும் பன்னாளொன்றா
யினும்பி
னுற்றபுளி யம்பழமு மோடுமொப்பா
ரென்றவரோ

பதவுரை : பினுற்ற — பின்னர் பொருந்திய.

கருத்துரை : இந்த ஜன்மத்தில் உள்ள தேகமும் ஜீவாத்மாவும், இந்த வாழ்க்கை முடியுமட்டும் பலநாள் ஒன்றாக இருப்பினும் இவை இரண்டும் பல ஜன்ம பரிணாமத்திற்குப் பின்னர் அவிவேகிகளால் நான் என்று அபிமானிக்கப்படும் சரீரமும், ஆத்மாவும் அஞ்ஞான தசையில் அநேகநாள் விபரீத புத்தியால் ஒன்றாக இருந்தாலும் ஞானம் வந்த பிறகு, காயில் பிரிக்க முடியாமல் ஒன்றாயிருந்த, தோலும், காயும், பழமானபின், பழமும், ஓடும் பிரிந்து வேறாதல் போல பொருந்திய புளியம் பழமும் ஓடும் போல் ஒட்டாது தனித்திருப்பது போன்று சரீரம் தானல்ல என்றும் அதன் சாட்சி வடிவ ஆன்மா தானென்றும் நன்றாக பிறவுபட்டு விளங்குவார் என்றவரோ.

99 கூறுமுல கியற்கையுடன் கூடினுமெய்ஞ்
ஞானம்வந்தோர்
சேறும்பிள்ளைப் பூச்சியும்போற் றிரிவார்கா
ணென்றவரோ

பதவுரை : கூறுமுலக — அசுத்தம், துக்கம், அனித்தியம் என்று கூறும் உலக, பிள்ளைப்பூச்சி — குழந்தைப் பேறுக்காகக் கொடுக்கும் பூச்சியாதலால் பிள்ளைப்பூச்சி.

கருத்துரை : அசுத்தம், துக்கம், அநித்தியம் என்று கூறும் உலக இயற்கையுடன் ஜீவன் கூடி வாழ்ந்தாலும் இவ்வாழ்க்கையை மெய்ஞ்ஞானம் வந்தோர் சக்தியும், அதில் உழலும் பிள்ளைப் பூச்சியும் போல் ஒன்றுக்கொன்று தன் வேறுபாட்டை உள்ளுணர்ந்து அறிவர். எவ்வளவு தொழில்களை உலக உபகாரமாகச் செய்து வாழ்ந்து வந்தாலும் தான் எப்போதும் வேறென்று பிரித்துக்கொண்டு பற்றின்றி வாழ்வார்கள் நடைமுறையில் பார் என்றவரோ.

100 ததியூடு கடைந்தவெண்ணெய் தான்
மோரிற் கிடப்பதுபோன்
மதியோடு கூடினும்பின் மயங்கார்கா
ணென்றவரோ





பதவுரை : ததியூடு — தயிரினிடத்து. மதியோடு — அந்தக்கரண விவகாரத்தோடு.

கருத்துரை : ஐம்புலனினாலும், தனித்து, உணர முடியாதபடி, தயிரில் கலந்திருக்கும் வெண்ணெய் நன்கு கடையப்பட்ட பின் மோரில் கலந்திருக்காமல் தனித்து, மிதந்து கிடப்பது போல் மெஞ்ஞானிகள் அந்தக்கரண புத்தியோடு கூடியிருப்பினும் கர்மஞானகரணச் செயல்பாடுகளில் மயங்காமல் விருப்பு வெறுப்புகளிலிருந்து விலகி சாக்ஷிமாத்திரமாய் வாழ்ந்து வருவதைக் காண். புத்தியோடு ஒன்றுபட்டிருந்த ஆத்மாவை பிரித்து எடுத்தபின், மீண்டும் அந்த புத்தியோடு கூடியிருந்தும் ஞானம் வந்த பின் உடலும் ஆத்மாவும் ஒன்று என்று மயக்கத்தை அடையார்கள் என்றவரோ.

101 அருச்சுரன்தன் பொருட்டாக வனைவருக்கு
ஞானம்வரப்
பொருந்தியதே சிகவடிவாம் புண்ணியரே
கண்வளரீர்

பதவுரை : பொருந்திய — உபதேசித்தல் அமைந்த.

கருத்துரை : மனித ஜீவர்கள் அனைவருக்கும் உபநிஷதங்களின் சாரம் அனைத்தும் அறிய மெய்ஞ்ஞானம் வர அர்சுனன் பொருட்டாக போர்களத்தில் அர்ச்சுனனை முன்னிலையாக வைத்து சகல பக்குவிகளுக்கும் மெய்ஞ்ஞானம் உதயமாகும் பொருட்டு ரதத்தில் குருநாதனா எழுந்தருளிய கீதை வடிவில் உபதேசித்தல் அமைந்த ஞான குருதேசிக வடிவாம். மனம் வாக்கு காயத்தால் புண்ணியம் கைவரப்பெற்ற ஞானவள்ளலே கண் வளரீர்.

102 ஆயர்குல மாதரனவிலோ ரைப்புணர்ந்துந்
தூயபதி னாறாயிரவருடன் றோய்ந்திருந்தும்

பதவுரை : புணர்ந்தும் — சேர்ந்தும், றோய்ந்திருந்தும் — பொருந்தி இருந்தும்.

கருத்துரை : சரணாகதி தத்துவத்தின் வெளிப்பாடாக இறைவல் பால் தூய பக்தியின் விளக்கமாய் தங்களை முற்றிலுமாய் அர்பணித்துவாழ்ந்த ஆத்மசாதகம் நிரம்பப்பெற்ற அளவிலாத ஆயர்குல மாதர்களுடன் உள்ளாணர்வால்சேர்ந்தும், அதேமுறையில் நிஷ்கம்ய யகர்மமார்க்கத்தில் பயனை எதிபார்க்காத தூய உள்ளம் கொண்டு நற்செயலாற்றும் பதினாயிரவருடன் பொருந்தி கலந்திருந்தும்.




103 பிரமமுநி வர்முன்னே பரிச்சித்தைத்
தீண்டியன்று
[illegible]மசரிய[illegible]செலுத்தும் பேரொளியே
கண்வளரீர்

பதவுரை: பரிச்சித்தை — அபிமன்யு மகனான பரிச்சித்து மகாராஜாவாகிய குழந்தையை. பிரம்மசரியம் — அஷ்டவித மைதுன மின்றி இருப்பது.

கருத்துரை: அஸ்தினாபுரச் சபையிலே பல [illegible]சைகளிலு மிருந்து குழுமிருந்த முனிவர்கள் பலர் கூடியிருந்தும் யாரும் தனது தூய பிரம்மச்சர்யத் தன்மையை நிலைநாட்ட சந்தேகப்பட்டு பயந்து முன்வராத நிலையில் உத்தரையின் கர்ப்பத்திலிருந்த பரிட்சித்தா கிய சிசு அஸ்வத்தாமனது அக்கினியாஸ் திரத்தால் கெட்டு வெறும் பிண்டமாக கீழே பிறக்க, அதைக் கண்டு தர்மராஜாதிகள் சந்ததியே அற்று விட்டதெனப் பகவானிடத்தில் முறையிட பிரம்மச்சாரிகள் இதனை கையால் தீண்டினால் உயிர் பெற்று எழும் என்று அருள அந்த மேலாகிய நாரதாதி மவுன சீலரின் சன்னதியில் கிருஷ்ணர் பரிச்சித்தை தீண்டியன்று தூய மாசு கலக்காத அஷ்டவித மைதுன மின்றிய நிலயை உணர்த்திய பேரொளியே கண் வளரீர்.

104 ஆதிமூ லம்விசயற் காதிமறை யின்பொருளை
யோதியுணர்த்து
மிந்த வுண்மைதனைக் காதலுற்றக்
கற்றோருங் கேட்டோருங்
காசினியில் வாழ்ந்துமுத்தி பெற்றோர்கண்
முத்தர்பெறும் பேறு

பதவுரை: காதலுற்றுக் — விருப்பம் கொண்டு, காசினியில் — உலகத்தில் முத்தர் — திட ஞானிகள்.

கருத்துரை: கிருஷ்ணராய் அவதரித்து வாழ்ந்து காட்டிய ஆதிமுலம், விவேகம் வைராக்கியம், கூடிய ஜீவர்கள் சார்பான அர்ச் சுனருக்கு பழைமை பொந்திய வே த ம் வேதாந்தம் உள்ளுரைந்து இலைமறை காய்களாகி பூத்துக்குலுங்கும் நன்மை பயக்கும் கருத்துக் களை படித்து கேட்டு ஆராய்ந்து அப்யசித்து உணர்த்தும் உண்மை தனை உண்மையான பிரியத்தால் ஆர்வமுடன் கற்றேரும், கேட் டோரும், இந்த உலகத்திலேயே வாழ்ந்து திடஞானிகள் பெறும், சர்வதுக்க நிவர்த்திப் பரமானந்தப் ப்ராப்தியாகிய ஜீவன் முக்தி பேறு பெற்றார் காணீர்.

( உரையுடன் கூடிய கீதாசாரத் தாலாட்டு முற்றிற்று )

12. எல்லோருடைய ஆத்மாவாக உருவமில்லாததாக கண்ணுக்கு விளங்காததாயும் மாறுதல் இல்லாததாயும் அசைவற்றதாயும் நிலை பெற்ற தாயும் உள்ள அழியாத அப்பரம் பொருளை எல்லா இடத்திலும் ஸமபுத்தி யுடையவர்களாய் இந்திரியக் கூட்டத்தை நன்கு அடக்கி, நன்கு தியானித்து யாவரும் இன்புற்றிருக்க நினைப்பது தர்ம யாம்ருத பத்தியோகமாகும்.

13 எல்லா ஜிவர்களின் சரீரங்களும் இந்த உடல், க்ஷேத்ரம் என்று பெரியோர்களால் கூறப்படுகிறது; எவன் இதை அறிகின்றானோ அந்த ஜீவனாகிய அவனே க்ஷேத்ரக்ஞன். ரூபமற்றதும் இணையற்றதும் முடிவு என்பது இல்லாததுமான அந்த அகண்டாகார சச்சிதானந்த பிரம்மமே கூடஸ்தன் என உணர்வது ஞானமாகும்.

14 பிரகிருதி மாயையால் இந்த உடம்பு உண்டானது. இந்த உடம்பில் ஆத்மாவாகிய நான் சாட்சி ரூபமாய் வசிக்கிறேன். பிரக்ருதி மாயையால் சத்துவ ரஜோ தமோ குணங்கள் உண்டானது ஞானம் தொழில் மயக்கம், பிறப்பு, இறப்பு வியாதி முதலான சரீரத்திற்கு வருகிற மாறுபாடுகள் உடம்பின் இயல் ஆத்மாவுக்கு சம்பந்தமில்லை. சுகம், துக்கம், லாபம், நஷ்டம், வெற்றி தோல்விகளால் மன மகிழ்ச்சியோ வாட்டமோ இல்லாமல் வாழ்வது குணத்ரயாதீதம்.

15. மாயையிலிருந்து உண்டான முக்குணங்களும் மனதையும் அறி வையும் மேல் நிலைகளுக்கு போகவிடாமல் தடுத்துக்கொண்டிருக்கும். ஆகவே அவனருளாலே அவன் தாள் பணிந்து எந்த நிலையை அடைந்தவர் கள் மீண்டும் பூவுலகில் பிறப்பதில்லையோ அப்பதத்தை அடைவதற்கு வேண்டி அவரது அருள் பெறவேண்டும். எவனிடமிருந்து பழமையான ஸம்ஸாரம் பெருகினதோ அந்த ஆதி புருஷனையே சரணடைகின்றேன்.

16. அதற்கு முன்பு எடுத்த பல ஜன்ம வாசனையால் தன்னிடம் மீதி யுள்ள குணங்களாகிய தீய குணங்களை ஒழித்து தெய்வ குணங்களாகிய நல்ல குணங்களை வளர்த்துக் கொள்ள வேண்டும். அந்தப் பதமாகிய பிரம்மஞான அனுபவம் திடப்படவேண்டும், மோக்ஷமடையலாம்.

17. தமோ குணத்தையும் ரஜோ குணத்தையும் உண்டு பண்ணுகின்ற புளிப்பு, உப்பு, காரம் முதலான உணவுகளை குறைத்து நீக்கிவிட வேண் டும். சாத்வீக குணத்தை வளர்க்கின்ற பால் பழவர்க்கங்கள் முதலான சத்தான உணவுகளை உட்கொள்ள வேண்டும். சாத்வீகமான தேவதை களின் பூஜைகளையும் ஜபங்களையும் சாத்விகமான தானங்களையும் செய்தல் சாத்வீக சிரத்தை யோகம்.

18. தன்னை நாடி வருகின்ற பாமர மக்களிடம் உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசி, தான் பெரிய ஞானியென ஆஷாடபூதி வேஷம் போட்டுக் காட்டாமல், அவர்களது ஆன்ம தாகத்தைத் தீர்ப்பதற் காக, சம்ஸார வாழ்க்கையில் பற்றற்று வாழ்ச்செய்து மேலான ஒப்பில்லாத ஆத்ம ஞானத்தை போதித்து, அவர்களை ஜீவப்பிரம்ம ஐக்ய நிலையில் நிலை பெறச் செய்யததக்க தூய ஞானயோகியாக வாழச் செய்வதே மோக[illegible] ஸந்யாஸ யோகம் எவனுக்கு தான் கர்த்தா என்று எண்ணம் இல்லை[illegible] எவனுடைய புத்தி பற்றப்படுவதில்லையோ அவன் இவ்வுலகத்துப் பி[illegible] களைக் கொன்ற போதிலும் கொல்லுவதில்லை, பந்தப்படுவதில்லை, [illegible] டைய சுய தர்மங்களை சாஸ்திரி முறைப்படி கடைப் பிடித்து, [illegible] விட்டு, மனத்தினாலும் வாக்கினாலும் சரீரத்தினாலும் பக்தியே[illegible] கதியாக என்னை அடைந்துவிடு; உன்னை நானே எல்லாப் பாவங்[illegible] ளும் விடுவித்து மோக்ஷத்தில் சேர்த்து விடுவேன், ச[illegible] இவை ஸ்ரீமத் பகவத் கீதையின் யோகப்படிகள் பதினெ[illegible]

கபிலாசாரியார், தத்தாத்திரேயர், வியாசர், சங்கரர் என சமஸ்கிருதத்திலும், திருவள்ளுவர், திருமூலர், கம்பர், ஆண்டாள், ஆழ்வார்கள், நாயன்மார்கள், சித்தர்கள் என தமிழகத்திலும் வேதாந்த அர்த்தங்களை மறைபொருளாகச் சுருங்கச்சொல்லி விளங்கவைத்த மகரிஷிகளுக்கும் அவைகளுக்கு விளக்கங்கள் கொடுத்துள்ள ஞானிகளுக்கும்; இக்காலகட்டத்தில் ஆத்மீகச் சாதகராயினோரிடத்து ஞானம் தூண்டுவித்துவந்த நெரூர் ஸ்ரீ கைலாஸ ஆஸ்ரம ஸ்தாபகரும் குமாரபாளையம் ஆனந்தாஸ்ரமம் போஷகராயும் இருந்த ஸ்ரீலஸ்ரீ சதாசிவானந்த சுவாமிகள் ( 1908-1985 ) தொடர்ந்து இப்போது ஸ்ரீ கைலாஸ ஆஸ்ரம தலைவராகவும் இன்னும் பல ஊர்களில் ஹிந்துமத ஸ்தாபகனங்களுக்கு முக்கிய ஸ்தானத்தில் இருக்கும் தவத்திரு தேஜோ மயானந்த ஸ்வாமிகள், மற்றும் குமாரபாளையம் எடப்பாடி ரோட்டிலிருக்கும் ஆனந்தாஸ்ரம குரு ஆசாரியராக இருந்துகொண்டு தினந்தோறும் வரிசைகிரமமாக கோவிலூர் மரபு 16 சாஸ்திரங்களையும் நடத்திவரும் தவத்திரு சோம கோபால சுவாமி அவர்களுக்கும் எனது மானசீகமான சாஸ்டாங்க நமஸ்காரங்கள் உரித்தாகுக. அவர்களின் சிலவருட தொடர்பால் ஆத்மீகப்பற்று தூண்டிவிடப்பட்டு ஆத்மீக ஞான நூல்கள் சில தொகுத்து ஞானதானமாக சமர்ப்பிக்கிறேன்.

செய்கையில் கடமையும் உள்ளத்தில் அன்பும் எப்போதும் வேண்டும்.

**R. T. P. இராமநாதன்**, பொது மேலாளர்

**436, சேலம் மெயின் ரோடு, கொமாரபாளையம்-638 183.**



மே...
சர்...
பேறு...

...ஷண்மத ஸ்தாபன சார்யாய நம :
...த்வைத ஸ்தாபன சார்யாய நம :
...ந பூமண்டலா சார்யாய நமோ நம :

...ாய மங்களம் கஜானனய மங்களம்
...ாம மங்களம் வேணுகிருஷ்ண மங்களம்
...o மங்களம் ராதாகிருஷ்ண மங்களம்.